Thanjavur Sarasvati Mahal Series No. 471

।। श्रीः ।।

# ।। वास्तुविद्या ।।

# வாஸ்துவித்யை

பதிப்பாசிரியர்

தேதியூர். **எஸ். கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள்,**

முன்னாள் மேநிலை ஸம்ஸ்கிருத பண்டிட்,

சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர்.




தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

சரசுவதி மகால் நூலகம்

மற்றும் ஆய்வு மையம்

தஞ்சாவூர்

**2009**

விலை : ரூ. 80-00

# நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு

| | | |
|---|---|---|
| நூற்பெயர் | : | **வாஸ்துவித்யை** |
| பதிப்பாசிரியர் | : | எஸ். கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள் |
| வெளியிடுபவர் | : | இயக்குநர், சரசுவதி மகால் நூலகம் மற்றும் ஆய்வு மையம் |
| வெளியீட்டு எண் | : | 471 |
| மொழி | : | ஸம்ஸ்கிருதம் - தமிழ் |
| பதிப்பு | : | இரண்டாம் பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : | 2009 |
| தாள் | : | TNPL 18.6 kgs. |
| நூல் அளவு | : | 21 x 14 c. m. |
| பக்கங்கள் | : | 160 |
| படிகள் | : | 1000 |
| எழுத்து | : | 16 & 12 |
| அச்சிட்டோர் | : | சரசுவதி மகால் நூலகம் |
| புத்தகக்கட்டு | : | மெலிந்த அட்டை |
| பொருள் | : | வாஸ்து சாஸ்திரம் |
| விலை | : | ரூ. 80-00 |

# வெளியீட்டாளர் முகவுரை

இந்திய மரபில் மனிதர்கள் வாழும் இல்லங்கள் அமைக்கும் கட்டக்கலைக்கென மிகத் சேய்மையான காலந்தொட்டு விதி முறைகளை வகுத்து அக்கலையைப் போற்றியுள்ளனர் என்பதைத் தொன்மையான நூல்களும், தொல்பொருள் தடயங்களும், காலங்கடந்து நிற்கும் கட்டடங்களும் சான்று பகர்கின்றன. சங்க நூல்களில் பத்துப்பாட்டில் நெடுநல்வாடை எனும் நூலில் கீழ்க்கண்டவாறு குறிப்புக் காணப்படுகிறது.

"சிற்பநூல் அறிந்த தச்சர் கூரிதாக நூலை நேரேபிடித்துத் திசைகளைக் குறித்துக்கொண்டு திசைகளில் நிற்கும் தெய்வங் களையும் குறைவறப் பார்த்து அரசர்கள் வாழ்வதற்கு ஏற்ப மனைகளையும் வாயில்களையும் மண்டபங்களையும் பிறவற்றையும் கூறுபடுத்தி இவையிற்றை ஒருசேர அகப்பட வளைத்தெடுத்த உயர்ந்து நிற்றலையுடைய மதிலின் அகத்தே என்பதாம்."

"நூலறி புலவர் நுண்ணிதிற் கயிறிட்டுத்
தேஎங்கொண்டு தெய்வ நோக்கிப்
பெரும் பெயர் மன்னர்க் கொப்ப மனைவகுத்து
ஒருங்குடன் வளைஇ யோங்கு நிலை வரைப்பில"

எனவே, ஈராயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழகத்தில் மனைகள் வகுக்க நூல்கள் இருந்தமையையும், அவற்றைச் செயல்படுத்த வல்லுநர்கள் திகழ்ந்தனர் என்பதையும் தெள்ளிதின் உணரமுடிகிறது.

இம்மரபின் தொடராகப் பின்னாளில் பல வாஸ்து நூல்கள் படைக்கப்பெற்றன. சரசுவதி மகால் நூலகத்தில் அத்தகைய நூல்கள் பல இடம் பெற்றன. ஆச்வலாயன க்ருஹ்ய ஸூத்ரபாஷ்யம், விஸ்வகர்ம வாஸ்து சாஸ்திரம், காச்யப சில்ப சாஸ்திரம், சகலாதிகாரம், சில்பரத்னம்,

ஸமராங்கண ஸூத்ரதாரா, மயமதம் போன்ற சுவடிகளில் உள்ள கட்டடக்கலை பற்றிய அரிய செய்திகளை சரசுவதி மகால் நூலகம் வெளியிட்டுள்ளது. தற்போது முன்னாள் மேனிலை சமஸ்கிருத பண்டிதர் திரு. தேதியூர் எஸ். கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள் பதிப்பித்துள்ள **வாஸ்து வித்யை** என்ற இந்நூல் இரண்டாம் பதிப்பாக வெளிவருகிறது.

இந்நூல் சமஸ்கிருத மூலத்தோடு, தமிழில் விளக்கமாக, வரைபடங்களோடு கட்டடக்கலை பற்றிய செய்திகளை எடுத்துரைக்கின்றது. இப்பதிப்பாசிரியர் இந்நூலில் "வாஸ்து" என்பதன் பொருள், மனைகள் சோதனையிட்டு தேர்ந்தெடுக்கும் முறைகள், விலக்கத்தக்க மனைகள், பலவகை மனைகளின் அமைப்பு, வீடுகள் அமைக்கும்போது பல்வேறு அறைகள் எடுப்பது போன்ற அரிய செய்திகளைத் தந்துள்ளார். வாஸ்து கலையில் ஆர்வமுள்ளோருக்கு இந்நூல் மிக பயனுள்ளதாய் விளங்கும் என்பதில் ஐயமில்லை.

இந்நூல் வெளிவர நிதி உதவி நல்கிய நடுவண் அரசுக்கும், நிருவாக அலுவலர் மற்றும் வெளியீட்டு மேலாளர் (பொறுப்பு) திரு. சாமி. சிவஞானம் அவர்களுக்கும், இந்நூல் கணினி அச்சில் வெளிவர, கணினி பிரிவில் பணிபுரியும் அனைவருக்கும் எனது பாராட்டுதல்களைத் தெரிவித்துக்கொள்கிறேன்

தஞ்சாவூர்,
30-5-09

**எம். எஸ். சண்முகம், இ. ஆ. ப.,**
மாவட்ட ஆட்சித்தலைவர்
மற்றும் இயக்குநர்,
சரசுவதிமகால் நூலகம்

# முன்னுரை

வேதங்கள் ருக், யஜுஸ், ஸாம, அதர்வ என்பதாக நான்கு ஆகும். ஒவ்வொரு வேதத்திற்கும் ஒரு உபவேதம் உண்டு என்றும், அதன்படி ருக்வேதத்திற்கு ஆயுர்வேதம் உபவேதம் என்றும் யஜுர் வேதத்திற்கு "தனுர்வேதம்" உபவேதம் என்றும், ஸாமவேதத்திற்கு "காந்தர்வவேதம்" உபவேதம் என்றும், அதர்வவேதத்திற்கு "ஸ்தாபத்யவேதம்" உபவேதம் என்றும், கூறப்படுகிறது ஸ்த + பதி. ஸ்த = அசையாதன. அசையாதனவற்றை அசையாப் பொருள்கள் கொண்டு படைப்பவர் ஸ்தபதி. அவருடைய செயல்பாடு ஸ்தாபத்யம். அசையாதனவாகிய மரம், கருங்கல், மண், சுண்ணாம்பு போன்றவற்றைக் கொண்டு அசையாத ஆலயங்கள். ஆலயங்களில் கடவுளர் வடிவங்கள் ஆகியவற்றை அமைக்கும் ஸ்தபதிகள் போலவே நடமாடும் ஜீவன்களை மழை, வெயில், குளிர் போன்றவற்றிலிருந்து பாதுகாக்கும் வகையில் அந்தந்த இடங்களில் தட்பவெப்ப நிலைக்கு ஏற்பவும் தேவைக்கு ஏற்பவும் சிறியதாகவும், நடுத்தரமாகவும், பெரியதாகவும் கட்டிடங்களை - வீடுகளை அமைக்கும் கலைஞர்களும் கட்டிடக் கலைஞர்களும் மரியாதைக்குரியவர்களாவர்.

ஒரு குறிப்பிட்ட கட்டம் வரையில் ஆலய நிரமாண ஆரம்பப் பணியும் கட்டிடக் கலையும், (வீடு அமைக்கும் பணியும்) இணைந்ததாகவே இருக்கின்றன. சிற்ப சாஸ்தி வல்லுநர்களில் சிலர் நகர அமைப்பு, கிராம அமைப்பு நகரத்தில் அரசர்கள் குடியிருக்கும் இடங்கள், மந்திரிகள் குடியிருக்கும் இடங்கள், யானை-குதிரைகளின் கொட்டடிகள், சேனைத்தலைவரின் வீடுகள் ஆயுதசாலை என்பவை, பொக்கிஷசாலை அமைப்பு பற்றியும் வீதிகள், ஆலயங்கள், குளம், ஏரி, பூங்காக்கள் போன்றவை எவ்வாறு அமைக்கப்பட வேண்டும் என்பது பற்றியும் கூறியுள்ளார்கள். ஆனால் சிற்ப

சாஸ்திரத்தை உபதேசித்த முன்னோர்கள் பதினெட்டு ஆசிரியர்களும், ஆலய நிர்மாணம், கடவுளர் திருமேனி ஆகியவைகளின் நிர்மாணத்திற்கு முக்யத்வம் அளித்ததுபோல் கட்டிடக்கலைகளுக்கு முக்கியத்துவம் தரவில்லை என்று தெரிகிறது. (விச்வகர்ம வாஸ்து சாஸ்திரம் தவிர)

भृगुरत्रिः वसिष्ठश्च विश्वकर्मा मयस्तथा ।
नारदो नग्नजिच्चैव विशालाक्षः पुरन्दरः ।।

ब्रह्मा कुमारो नन्दीशः शौनको गर्ग एव च ।
वासुदेवोऽनिरुद्धश्च तथा शुक्रबृहस्पती ।।
अष्टादशैते विख्याताः शिल्पशास्त्रोपदेशकाः ।।

ப்ருகு, அத்ரி, வஸிஷ்டர், விச்வகர்மா, மயன், நாரதர், நக்னஜித், விசாலாக்ஷன், இந்திரன், ப்ரம்மதேவர், குமாரன், நந்திகேச்வரர், சௌனகர், கர்கர், கிருஷ்ணன், அநிருத்தன், சுக்ராசார்யர், பருஹஸ்பதி ஆகிய பதினெட்டு முனிவர்கள் சிற்ப சாஸ்திரம் உபதேசித்தவர்கள் ஆவர். இவர்களைத் தவிர காச்யப சிறப சாஸ்திரம் (காச்யபர்), ஸகலாதிகாரம் (அகஸ்தியர்) மானஸாரம் (மானஸாரர்) போன்ற நூல்களும் உண்டு.

இந்நூல்களுக்குமுன் விச்வகர்ம வாஸ்து சாஸ்திரம் பெரும்பாலும் நகரம், கிராமம், வீதி, நகர வீடுகள், கிராமத்தில் வீடுகள், கிணறு அமைப்பு போன்றவை பற்றியே பெரும்பாலும் கூறிகின்றது. "ப்ராம்மீய சித்ரகர்ம சாஸ்திரம்", "ஸாரஸ்வத சித்ரகர்ம சாஸ்திரம்", இரண்டும் பெயரளவில்தான் சித்ரகர்ம சாஸ்திரம் என்று நூலின் தலைப்பிலிருந்து அறிய முடிகிறது. உள்பொருள் முழுவதுமே சிற்ப நிர்மாணம் பற்றியதே. **மானஸார** எனும் நூலும் இத்தகையதே..

11ஆம் நூற்றாண்டில் தாரா நகரை ஆண்ட போஜ மன்னன், வைத்யம், இலக்கியம், வேதாந்தம் இலக்கணம் போன்ற சகல கலைகளிலும் இணையற்ற அறிவாற்றல்பெற்று

நூல்களும் எழுதியவராவார். அவர் எழுதிய **ஸமராங்கண ஸூத்ரதார Samarangana Sootra Dhara** எனும் நூலின் முதற்பகுதியில் உள்ள 45 அத்யாயங்களும் நகரம், அரண்மனை, நகர வீதிகளின் அமைப்பு, மண்டபங்கள் அமைப்பது, குடியிருப்பு வீடுகள் தனித்தனியாகவும், தொகுப்பாகவும் அமைத்தல் பற்றி விரிவாகக் கூறுகின்றன. அந்நூலின் பிற்பகுதி யந்த்ரங்கள் பற்றிக் கூறுகிறது. எல்லா நூல்களிலுமே, பூமி சோதனை, திசை நிர்ணயம் வாஸ்து மண்டலத்தில் உள்ள தேவதைகள், அவர்களை வழிபடுவதன் அவசியம் பற்றி முக்கியமாகக் கூறப்படுகிறது.

சரசுவதி மகால் நூலகத்தின் இயக்குநர் மற்றும் தஞ்சை மாவட்ட ஆட்சித்தலைவர் அவர்கள் வாஸ்து பற்றிய நூல் ஒன்று நமது நூலகத்தில் உள்ள சிற்ப சாஸ்திர நூல்களையும் வாஸ்து சாஸ்திர நூல்களை (விச்வகர்ம வாஸ்து சாஸ்திரம்)யும் படித்து சிறப்பான முறையில் எழுதும் பணியைச் செய்ய எனக்கு உத்திரவிட்டதும், சாமான்ய அறிவுள்ள - வாஸ்து சாஸ்திரம் தொடர்பாக ஏதும் அறியாத நான் செய்வதறியாது குழப்பமடைந்தேன், எப்படியாவது இப்பொறுப்பை நிறைவு செய்வது என்று பல இடங்கள் சென்று பல மொழி (ஹிந்தி, ஆங்கிலம்) நூல்களையும் படித்து ஓரளவுக்கு நூலை நிறைவு செய்யும் துணிவைப் பெற்றேன்.

வாஸ்து பற்றிய நூல்களைப் படிக்க முற்பட்ட பொழுதுதான் இது ஒரு எல்லையில்லாக் கடல்போல் விரிந்த விஞ்ஞானம் என்றும் கண்டேன்.

"ஸமராங்கண ஸூத்ரதார" என்ற நூலில் ஒரு மனையில் ஒரு வீடு, "ஏகசாலா" எத்தனை வகையாக அமைக்கலாம், இரண்டு அடுக்கு வீடுகள் (2 Block system) எப்படி எத்தனை வகையில் அமைக்கலாம் என்றும், தொடங்கி 8 வீடுகள் ஒரு மனையில் எத்தனை வகையாக அமைக்கலாம் என்றும் "ஆளிந்த" Terrace அமைப்பது பற்றியும் கூறியுள்ளது பற்றி அறிய திகைப்புத்தான் மேலிடுகிறது.

| | |
|---|---|
| ஏகசாலா | 108 வகை என்றும், |
| த்விசாலா | 52 வகை என்றும், |
| த்ரிசாலா | 72 வகை என்றும், |
| சதுஸ்சாலா | 250 வகை என்றும் |
| பஞ்சசாலா | 1025 வகை என்றும், |
| ஷட்சாலா | 4090 வகை என்றும் |

இவ்விதம் பல அடுக்கு வீடுகள் அமைப்பது பற்றியும் அவற்றுள் மங்களகரமானவை - வளமான வாழ்வைத் தரக்கூடியவை யாவை என்பது பற்றியும் 20வது அத்யாயம் முதல் 25வது அத்யாயம் முடிய கூறப்படுகிறது.

வாஸ்து சாஸ்திரம்பற்றி சிறிதளவு அறிவும் இல்லாத நான் எழுத முற்பட்ட **வாஸ்து வித்யை** எனும் நூலால் உலகப் புகழ்பெற்ற இந்த சரசுவதி மகால் நூலகத்தின் பெருமைக்குக் குறைவு ஏற்பட்டு விடலாகாது என்ற கவலையும் பயமும், இந்த நூல் அறிஞர்கள் பார்வையிட்டு "சுமாராக இருக்கிறது" என்ற அளவிலாவது அங்கீகாரம் பெற்றால்தான் விலகும். இதற்கென நான் வழிபடும் ஸ்ரீபராசக்தியை இடையறாது பிரார்த்தித்து வருகின்றேன்.

**இந்த நூலைத் தொகுப்பதற்கு நான் பார்வையிட்ட நூல்கள் :**


1. வாஸ்து வித்யா - Edited by T. Ganapati Sastri, Trivandram.
2. ஆச்வலாயன க்ருஹ்ய ஸூத்ர பாஷ்யம்
   - சரசுவதி மகால் நூலகம்
3. விச்வகர்ம வாஸ்து சாஸ்த்ரம் - சரசுவதி மகால் நூலகம்.
4. காச்யப சில்ப சாஸ்த்ரம் - சரசுவதி மகால் நூலகம்.
5. ஸகலாதிகாரம் - சரசுவதி மகால் நூலகம்.
6. சில்ப்பரத்னம் - சரசுவதி மகால் நூலகம்.
7. மஸ்த்ய புராணம்
8. ப்ரம்ம கர்ம ஸமுச்சயம் Very old Book
   Nirnayasagar press Edition, mumbai.
9. ஸமராங்கண ஸூத்ரதார - சரசுவதி மகால் நூலகம்

வாஸ்து மண்டலம் 64 பதங்கள் உள்ளதாயும், 81 பதங்கள் உள்ளதாயும் இருவகை கூறப்படுகிறது. 81 பதங்கள் உள்ள மண்டலமே வீடு மனைகளுக்கு உகந்ததெனக் கூறப்படுகிறது. ஸமராங்கண ஸூத்ரதார நூலில் 11வது அத்யாயத்தில் 100 பதங்கள் உள்ள மண்டலம் பற்றியும் கூறப்படுகிறது. நான் படித்த பிற எந்த நூலிலும் 100 பதங்கள் உள்ள வாஸ்து மண்டலம் காணப்படவில்லை.

चतुरश्रीकृते क्षेत्रे दशधा प्रविभाजिते ।
भवेत् शतपदो वास्तुः . . . . Samarangana Adh. 11- Vesr. 15

என் சிற்றறிவுக்குத் தெரிந்த வரையில் தொகுக்கப்பட்ட இந்த நூல் ஸ்ரீபராசக்தியின் திருவருளால் வாஸ்து நூலறிஞர்களால் அங்கீகரிக்கப்படவேண்டுமே என்று கவலையுடன் பிரார்த்திக்கின்றேன்.

ஸம்ஸ்க்ருத பண்டிட்டாக சரசுவதி மகால் நூலகத்தில் பணிபுரிந்த என்னிடம், வாஸ்து பற்றிய சிறந்த நூலைப் பதிப்பிக்கும் பொறுப்பையளித்த நூலக நிருவாகத்தினருக்கும், இந்நூல் சிறந்த நூலாக மலரக் காரணமாக விளங்குகின்ற தஞ்சை மாவட்ட ஆட்சித்தலைவரும், நூலக இயக்குநருமான. திரு. மா. வீரசண்முகமணி, இ. ஆ. ப., அவர்களுக்கும், நூலக நிருவாக அலுவலர் திரு. இரா. சுப்ரமணியன், எம். ஏ., அவர்களுக்கும், நூலக வெளியீட்டு மேலாளர் முனைவர் குடவாயில் திரு. பாலசுப்ரமணியன் அவர்களுக்கும் எனது உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். இந்நூலை நன்முறையில் அச்சிட்ட நூலக கணினி பிரிவினருக்கும், நூற்கட்டுப் பிரிவினருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தஞ்சாவூர் — தேதியூர் **எஸ். கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள்,**
20-5-2005 — முன்னாள் மேநிலை ஸம்ஸ்கிருத பண்டிட்

## பொருளடக்கம்

|| श्रीः ||

|| श्री गुरुभ्यो नमः ||

# வாஸ்து வித்யை

**வா**ஸ்து என்னும் சொல்லின் பொருள் யாது? வசித்தல் எனும் பொருளைக் குறிப்பிடும் ஸம்ஸ்கிருத மூலச்சொல்லான वस् (வஸ்) எனும் Root தாதுவிலிருந்து பிறந்த சொல்லே **வஸ்து** என்ற சொல்லும் **வாஸ்து** என்ற சொல்லும் ஆகும்.

இச்சொல்லிற்குத் தத்தம் கற்பனைக்கு ஏற்ப வெவ்வேறு விதமாகப் பொருள் கூறுவோரும் உண்டு. "ஸம்ஸ்க்ருத மொழிச் சொற்கள் அநேகமாக எல்லாமே ஏதோ ஒரு ஸம்ஸ்க்ருத மூலச்சொல் (Root - தாதுவி)லிருந்தே தோன்றியவை" என்று சொல்லப்படுவதுண்டு. ஸம்ஸ்க்ருத மொழி இலக்கணம் வகுத்த **பாணினி** என்பவர் இயற்றிய ஸூத்திரங்கள் வழியாகவும், 'உணாதி' ஸூத்திரங்கள் வழியாகவும் பெரும்பாலான ஸம்ஸ்கிருத மொழிப் பெயர்ச் சொற்கள் அமைந்துள்ளன. எந்த விதத்திலும் இலக்கண விதிகளுக்கு உட்படாத பெயர்ச்சொற்கள் 'நிபாதங்கள்' என்ற பெயரால் (சிறப்பு விதியால்) அமைந்தவைகளும் உண்டு.

வசித்தல் எனும் பொருளில் உள்ள 'வஸ்' (वस्) எனும் தாது (Root) விற்குமேல் 'துன்' (तुन्) எனும் விகுதி சேர்த்து-'ன்' என்ற எழுத்து இலக்கண விதிமுறைக்கு ஏற்ப மறைந்து 'வஸ்து' என்ற சொல் அமைந்தது.

இதே வஸ் (वस्) எனும் தாதுவிற்குமேல் (உறைவிடம்) எனும் பொருளைக் குறிப்பிடும்பொழுது "अगारे णिच्च" (அகாரே ணிச்ச) என்ற விருத்தியுரை மூலம் वस् (வஸ்) तुण् (துண்) என்ற விகுதி வந்து ण् (ண்) என்ற எழுத்து மறையும்பொழுது - वस् (வஸ்) எனும் மூலச்சொல்லின் ஆரம்பத்தில் உள்ள (व्+अ=व) अ (அ) எனும் உயிர் எழுத்தானது வ்ருத்தி (वृद्धि) நிலைபெற்றுவிடும் என்ற பொருள்கொண்ட பாணினி ஸூத்ரத்தால் वास्+तु=वास्तु (வாஸ்து) என்ற சொல் அமைகிறது.

வாஸ்து என்பதற்கு வீடு, மண்டபம், உறைவிடம், ஆலயம் போன்ற கட்டிடம் என்ற பொருளும் லக்ஷணை (லக்ஷணா)யாகக் கட்டிடங்கள் அமைவதற்கு வேண்டிய கருவிகள் சாதனங்கள் உரிய இடங்கள் (Sites, Building ground) என்ற பொருளும் உண்டு.

கட்டிடங்கள் அமைப்பதற்குத் தேவையான பணம் என்பது முதல் சாதனம் ஆகும். செங்கல், சுண்ணாம்பு, சிமெண்ட், இரும்பு தளவாடங்கள், மரங்கள் **(Timber)** ஆகியவை **வஸ்து** என்று கூறப்படுகின்றன. "மயமதம்" நூலின் முதற்பாகம், இரண்டாவது அத்யாயத்தில் கூறப்படுவது, தேவர்கள், மனிதர்கள் எங்கு வசிக்கிறார்களோ, அந்த இடங்கள் யாவும் வஸ்து என்றே வாஸ்து சாஸ்திரம் அறிந்த நூலோரால் அழைக்கப்படுகின்றன.

अमर्त्याश्चैव मर्त्याश्च यत्र यत्र वसन्ति हि ।
तद्वस्त्विति मतं तज्ज्ञैः तद्भेदं च वदाम्यहम् ।।

भूमिप्रासादयानानि शयनं च चतुर्विधम् ।
भूरेव मुख्यवस्तु स्यात् तत्र जातानि यानि च ।

प्रासादादीनि वस्तूनि वस्तुत्वात् वस्तु संश्रयात् ।
वस्तून्येव . . . . . . . . . . . . . . . . ।।

வஸ்து என்பது (1) பூமி, (2) பெரிய மாளிகை - பெரிய அளவில் அமைக்கப்பட்ட வீடு, (3) வாஹனங்கள், (4) சயனம் (படுக்கை) என்று நான்கு வகைப்படுகிறது.

ப்ராஸாதம் (மாளிகை) முதலானவற்றைத் தாங்கியுள்ள காரணத்தால் பூமியே முக்யமான வஸ்துவாகும். ப்ராஸாதம் (பெரிய அளவினதான வீடு) முதலானவை யாவுமே வஸ்துக்கள்தாம் என்பதாலும் அவை ஆதாரமான பூமியில் இருப்பதாலும் (பூமியை ஆதாரமாகக் கொண்டிருப்பதால்)

அவை யாவுமே வஸ்துக்களாகும். கௌடில்யரின் அர்த்தசாஸ்திரமும் இக்கருத்தையே கொண்டதாக இருக்கிறது. கட்டிடங்கள் அமைப்பதற்கு மூலப்பொருளாகவுள்ள பணம் நியாயமாகச் சம்பாதிக்கப்பட்டதாகவும், தேவையான பொருட்கள் யாவும் நியாயமாகச் சம்பாதிக்கப்பட்ட பணத்தால் வாங்கப்பட்டதாகவும் இருத்தல் அவசியம். நியாயமாகச் சம்பாதிக்கப்பட்ட பொருள் (பணத்தைக்) கொண்டும் வாங்கப்பட்ட பொருளைக்கொண்டும் அமைக்கப்படும் வீடுகள், மண்டபங்கள், ஆலயங்கள் பல்லாண்டு காலம் வரையில் லக்ஷ்மீகரமாகச் சிறந்து விளங்குகின்றன.

सर्वनिर्माणकार्याणाम् द्रव्यमाद्यःसखा मतः ।
तस्मात् सम्पादयेद्विद्वान् सद्द्रव्यं शुभवर्धनम् ।।

इष्टिका च शुभा श्लक्ष्णा पारिभद्रादिदारवः ।
अयः कीलादयश्चान्ये वस्तुसंज्ञा उदीरिताः ।।
(विश्वकर्म वास्तु शास्त्रम् Ch. 4 - 2, 3)

ஸர்வ நிர்மாணகார்யாணாம் த்ரவ்யமாத்ய:ஸகா மத:।
தஸ்மாத் ஸம்பாதயேத் வித்வான் ஸத்த்ரவ்யம் சுபவர்தனம் ।

இஷ்டிகா ச சுபா ச்லக்ஷ்ணா பாரிபத்ராதிதாரவ:।
அய: கீலாதயஸ்சான்யே வஸ்துஸம்ஞா உதீரிதா:॥
(விச்வகர்ம வாஸ்து சாஸ்த்ரம் அத். 4 - 2, 3)

அமைக்கப்படவுள்ள ஆலயம் முதலானவற்றிற்குத் தேவையான மரங்கள், சில நாட்கள், சில மாதங்கள் சென்று தேவைப்படுவதாக இருந்தாலும் அவற்றை முழு மரங்களாக வெட்டப்படுவதற்கு முன்னதாகவே நல்ல சுபமான மாதத்தில் நல்ல நாளில் வாங்கிவிடுவது நலம்.

தேவையான மரங்களை வனம் அல்லது தோட்டங்களுக்குச் சென்று முழு மரங்களாக வாங்குவதே

நல்லது. அவ்வாறு வாங்குவதால் அவை நல்ல தரமான மரங்கள்தானா, யானை, பன்றி முதலான பிராணிகள் தம் உடல் அரிப்பைப் போக்கிக்கொள்வதற்கு உறாய்ந்ததால் பட்டைகள் பெயர்ந்து விழாதவைதானா, இடி விழுந்த மரமாக இல்லாதிருக்கின்றனவா? தீய பழக்கங்கள் உள்ளவர்கள் வசிக்கும் இடங்களில் வளர்ந்த மரங்களாக இல்லாமல் இருக்கின்றனவா என்பதை ஆராயமுடியும். முன்நாட்களில் இவ்வாறான சோதனைகள் செய்தே சாமான்களை வாங்கி கட்டிடங்களை எழுப்பினர். அதனாலேதான் பல்லாண்டு வயதான ஆலயங்களும், பங்களாக்களும் இன்றளவும் சிறந்து விளங்குகின்றதனவோ என்று சொல்லச் செய்கிறது.

இக்காலத்தில் இதற்கு வாய்ப்பே இல்லையெனலாம். நகரங்கள்தோறும் பல அளவுகளில் சைஸ் (sized) செய்யப்பட்ட விதவிதமான மரங்களை (Timber) விற்பனை செய்யும் பல மர வியாபாரத்தலங்கள் இப்பணியை எளிதாக்கும் விதத்தில் அமைந்துள்ளன. இதனால் பின்னால் குறிப்பிட்டதுபோல் மரங்களைத் தேர்வு செய்யமுடியாமல் இருக்கலாம். ஆனால் நல்ல மரவியாபாரிகள் மேலே கூறப்பட்ட கருத்துக்களைக் கட்டாயம் கருத்தில் கொண்டுதான் முழு மரங்களைத் தேர்வு செய்து வெட்டி வாங்கிவருவர் என்பது நிச்சயம்.

மர வியாபாரிகள்காடுகளில் நேரில் சென்று மரங்களைத் தேர்வு செய்யும்பொழுதும், அவற்றை வெட்டும் பொழுதும், மரங்கள் பட்டைகளுடன் உள்ளனவா? காட்டுப்பன்றிகளும், யானைகளும் தம் உடல் அரிப்பைப் போக்கிக்கொள்வதற்காக உறாய்ந்து பட்டைகளைப் பெயர்த்துவிடாமல் இருக்கின்றனவா? பெருங்காற்றில் காய்ந்து விழுந்த மரமாகில் தென்திசைப்பக்கம் விழாத மரங்களாக உள்ளனவா என்பதைக் காணவேண்டும். அடுத்து அவர்கள் (மர வியாபாரிகள்) வெட்டப்படும் மரங்கள் தென்திசைப்பக்கத்தில் விழுந்து விடாதவாறு வெட்டிச் சாய்க்கச் சொல்லவேண்டும்.

ஆலயத்திற்கான முழுமரங்களை எடுத்துவரும் சமயம் பெரியோர்களை வணங்கி-ஸ்தபதி-மர வேலை செய்யும் கலைஞர்கள் முதலானோர்களை வெகுமானத்தால் மகிழ்வித்து அக்கலைஞர்கள் உபயோகிக்கும் ஆயுதங்களை (கருவிகளை)யும் ஆயுத தேவதைகளையும் - தேவர்களையும் சந்தனம், மலர்கள் முதலானவற்றால் பூஜித்த பிறகு மங்கள வாத்யங்கள் முழங்க - ஆலயங்களுக்கான கொடிமரங்கள் - முதலானவற்றிற்கான மரங்களை எடுத்துவரவேண்டும் என்பது சிற்பிகளின் சம்பிரதாயம்.

சிலவகை மரங்கள் வகுள-ஸால-கேஸர முதலான மரங்கள் கோயில்களில் பயன்படத்தக்கவை. சிலவகை மரங்கள், வீடுகள் அமைக்கவும், ஆலய நிர்மாணம் செய்யவும் - (கருங்காலி, மாமரம், வேம்பு, மூங்கில் முதலானவை) பயன்படத்தக்கவையாம். சிலவகை மரங்கள் படிக்கட்டுகள் அமைக்க சிலவகை மரங்கள் பலகைகளாகச் செய்ய சிலவகை மரங்கள் தூண்கள் கட்டில் கால்கள் - ஆசனங்கள், பீடங்கள் அமைக்கவென்று பலவகை மரங்கள் உள்ளன.

ஆலய நிர்மாணத்திற்கு உரிய மரங்கள் தேர்வு செய்யப்படும்பொழுது அவை தென்புறமாக விழுந்த-விழச் செய்யப்பட்ட மரங்களாகவும், சுடுகாடு-இடுகாடுகளில் வளர்த்த மரங்களாகவும், தீய பழக்கங்கள் உள்ளவர்கள் வசிக்கும் இடங்களில் வளர்ந்த மரங்களாகவும், இடி விழுந்த மரங்களாகவும் இல்லாமலிருக்கின்றனவா என்பதைக் கண்டறியவேண்டும். அவ்வகை மரங்களைத் தவிர்க்க வேண்டும்.

வீடுகள், மண்டபங்கள் அமைக்கும்பொழுதும் இதுபோன்ற நியதிகளைக் கடைப்பிடிக்கவேண்டும். முக்கியமாக ஒரு பழைய வீட்டில் உத்தரங்கள், தூண்கள், வாசல், அறை, நிலைகள், ஜன்னல்கள் மற்றும் கதவுகள் முதலானவை நல்ல தேக்கு போன்ற மரத்தால் ஆனவையாக

இருப்பதைக்கண்டு அவ்வகைப் பழமையான வீட்டை விலைக்கு வாங்கி அதிலிருந்த மரங்களையும் பலகைகளையும் பெயர்த்தெடுத்துவந்து புதிதாக நிர்மாணிக்கும் கட்டிடங்களில் வீடுகளில் அமைக்க விரும்புவதுண்டு. அவ்வாறு ஓரிடத்தில் உபயோகிக்கப்பட்ட மரங்களைப் பெயர்த்தெடுத்துவந்து இன்னொரு புதிய கட்டிடத்தில் அமைக்கும்முறை தவறானது. பழைய வீட்டின் சொந்தக்காராகவே இருந்தாலும் ஒரு பழைய வீட்டின் பொருட்களை புதிய வீடுகளில் பயன்படுத்துவது நல்லதல்ல; தவிர்க்கவேண்டும்.

கோயில்களுக்கான மரங்களை வனத்திலிருந்தும் தோப்புகளிலிருந்தும் கொண்டுவரும் நாள் புதன், திங்கள், குரு, சுக்ரன் ஆகியவர்களின் நாட்களில் ஒன்றாக இருப்பது அவசியம். வாஸ்து மண்டலத்தில் அமைந்துள்ள அக்னி, விவஸ்வான், தௌவாரிகன், மித்ரன், யமன், சந்திரன், சேஷன், ஈசானன் முதலான தேவர்களைப் பூஜைசெய்துவிட்டு, நல்ல வளர்ந்த வலிமை வாய்ந்த காளைகள் பூட்டப்பட்ட வண்டிகளில் ஏற்றிவந்து ஒரு தூய்மையுள்ள இடத்தில் அந்த மரங்களில் உள்ள பால் சுண்டுவதற்காக ஆறு மாதங்கள் வரையிலோ, ஒரு ஆண்டு வரையிலோ பாதுகாப்புடன் வைத்திருக்கவேண்டும். சிலவகை மரங்கள் - மூங்கில் போன்றவை - தண்ணீரில் போட்டுப் பாதுகாக்க வேண்டியனவாக இருக்கலாம். சிலவகை மரங்கள் வெயிலில் காயவேண்டியனவாகவும், சிலவகை மரங்கள் நிழலில் நிழல் பாடமாகக் காயவேண்டியனவாக இருக்கலாம். அவற்றை உரிய விதத்தில் ஸ்தாபிதம் செய்யவேண்டும். செங்கல், கிரானட் போன்றவையும், சிமிண்ட் முதலானவையும் பழுதற்றவைகளாகவும் நல்ல நிறமுள்ளதாகவும் இருத்தல் அவசியம்.

---

1. பண்டைக்கால நிலைக்கு ஏற்பக்கூறப்பட்டுள்ள இக்கருத்துக்களை நவீனமான இக்கால நிலைக்கு ஏற்ப மாற்றிக்கொள்ளலாம்.

## வாஸ்து சோதனை

ப்ரம்மதேவனால் படைக்கப்பட்ட இப்பூவுலகில் பாரத வர்ஷம் எனப்படும் இமயம் முதல் குமரிவரையுள்ள பிரதேசத்தில் சில இடங்களில் நல்ல சுவையான நிலத்தடி நீர் அதிக ஆழத்தில் இல்லாமல் கிடைக்கக்கூடியதாக இருக்கும். சில இடங்களில் நிலத்திடி நீர் உவர்ப்பு (கரிப்பு) சுவையுள்ளதாக இருக்கும், சில இடங்களில் நீர் கிடைக்காததாகவும் இருக்கும். வேறு சில இடங்களில் இரும்பு, செம்பு, வெள்ளி, தங்கம் போன்ற உலோக மூலத்தை உள்ளடக்கியதாகவும் இருக்கும். சில இடங்கள் சுக - அமைதியான வாழ்வைத் தரவல்லதாயும், சில இடங்களில் துயரங்களையும், பெரும் செலவினங்களையும், நோய்களையும் தரவல்லதாக இருக்கலாம். ஆகையால் குடியிருப்பு வீடுகள், மண்டபங்கள், ஆலயங்கள் போன்றவை அமைவதற்குரிய இடத்தைச் சோதனை செய்த பிறகுதான் கட்டிடங்கள் அமைக்கப்படவேண்டும்.

परीक्षयेदिमां भूमिं वास्तुयोग्यं बुधोत्तमः ।।

(वि. वा. शा. अध्या - ५)

பரீக்ஷயேதிமாம் பூமிம் வாஸ்துயோக்யம் புதோத்தம:॥

(வி. வா. சா. அத்-5)

## பூமி பரீக்ஷை (Examination of Sites)

"अथाथो वास्तुपरीक्षा" என்று "ஆச்வலாயன க்ருஹ்ய ஸூத்ரம்" எனும் பண்டைய நூலில் கூறப்பட்டவாறு கட்டிடங்கள் அமைக்கப்படவுள்ள பூமியின் பூர்வீக நிலையை நன்கு சோதித்து அறிந்தாகவேண்டும்.

பூமியின் பூர்வீக நிலைபற்றிச் சோதனை செய்யப்பட்டால் அவ்விங்களில் கட்டிடங்களை அமைப்பதால் அவை சில அதிருஷ்டவசமாக மங்களகரமாகவும், சில கவர்ச்சி மிக்கதாகவும், சில மேன்மை தராதனவையாகவும், சில சூன்யத் தோற்றம் உள்ளதாகவும் அமைந்துவிடலாம் (விடுகிறது).

இந்நாட்களில் சிலர் ரியர் எஸ்டேட் (Real Estates) என்ற பெயரில் நிலப்பகுதிகளையும் வியாபார நோக்குடன் விலைக்கு வாங்கி அவ்விடத்தை புல்டோசர் போன்ற பெரிய இயந்திரங்களைக் கொண்டு சமன்படுத்தி நிலத்தின் பூர்விக நிலை என்ன என்று அறியமுடியாதபடி செயல்படுகிறார்கள். அம்மாதிரி இடங்களில் அமைக்கப்படும் வீடுகள், மண்டபங்கள் முதலானவற்றில் சிலருக்கு அதிருஷ்டவசமாக மங்களகரமாக அமைந்துவிடுவதுண்டு, "சிலருக்கு ஏன் இந்த இடத்தில் வீடு அமைத்தோம்" என்று வருந்தும் நிலையை ஏற்படுத்துவதாகவும் அமைகின்றன. ஆதலின் பூமி சோதனை செய்த பிறகு கட்டிடங்கள் அமைப்பதுதான் சிறந்தது.

अनूषरमविवदिष्णु भूम

(அநூஷரம் அவிவதிஷ்ணு பூம) தரிசாக புல், பூண்டுகள் ஏதும் முளைக்காத வெறும் திடலாகவுள்ள பூமி வாஸ்து அமைப்பிற்கு ஏற்றதல்ல. பசுமையாக புல் பூண்டுகள் முளைத்த பூமியே சிறந்தது. மேலும், தேர்வு செய்யப்பட்ட பூமி சம்பந்தமாக எந்தவிதமான வில்லங்கமும்-வழக்கும் இருக்கலாகாது. பூமிக்கான தொகை முழுவதும் கொடுக்கப்பட்டுத் தக்கவரிடமிருந்து முறையான வரவுச் சீட்டும் (ரசீதும்) பெற்றுத் தமது சர்வ சுதந்திர அனுபவத்திற்கு உரியதாக அந்த பூமி இருத்தல்வேண்டும். விவாதத்திற்கு உரியதாக இல்லாதபடி இருத்தல்வேண்டும்.

ओषधि वनस्पतिवत् (ஓஷதிவனஸ்பதிவத்) நல்ல தென்னை, கமுகு, மா, பலா போன்ற மரங்கள் உள்ளதாகவும் சிறந்த பச்சிலைகள் உள்ளதாகவும் உள்ள பூமி கட்டிடங்கள் அமைக்க உகந்ததாம்.

यत्र कुशवीरणं प्रभूतम् (யத்ர குச வீரணம் ப்ரபூதம்) தர்ப்பை, நாணல், கோரைப்புல், விளாமிச்சை போன்ற மணமுள்ள கோரைக்கிழங்குகள் வளரும் பூமியாக இருப்பின் நல்லது. நீர்வளம் அதிக ஆழத்தில் இல்லாமல் சுவையுள்ள

நிலத்தடி நீர் அருகில் கிடைக்கக்கூடியதாகவுள்ள இடம். நைப்புள்ள மண் உள்ளதாக இருப்பின் அந்த இடம் சிறந்தது. கோரைக்கிழங்குகள் மிகுதியாகவுள்ள இடம் சிறந்ததாகக் கூறப்பட்டுள்ளது.

कण्टकि क्षीरिणस्तु समूलान् परिखाय उद्वासयेत् ।।

(கண்டகி க்ஷீரிணஸ்து ஸமூலான் பரிகாய உத்வாஸயேத்) அந்த தேர்வு செய்யப்பட்ட இடத்தில் முட்கள் உள்ள மரங்களும், செடிகளும் ஆல்போன்ற பால் உள்ள மரங்களும் இருப்பின் அவற்றை வேருடன் களைந்து அப்புறப்படுத்த வேண்டும்.

अपामार्गः शाकस्तिल्वकः परिव्याध इति चैतानि

(அபாமார்க: சாகஸ்தில்வக: பரிவ்யாத இதி ச ஏதானி) தேர்வு செய்யப்பட்ட இடத்தில் நாயுருவி. தூங்குமூஞ்சி மரம், கடம்பமரம் போன்றவை இருந்தால் அவற்றையும் வேருடன் களைந்து அப்புறப்படுத்தவேண்டும்.

यत्र सर्वत्रापो मध्यं समेत्य प्रदक्षिणं शयनीयं परीत्य प्राच्यः स्यन्देरन् अपप्रतत्यः तत्सर्व समृद्धम् ।।

(யத்ர ஸர்வத்ர ஆபோ மத்யம் ஸமேத்ய ப்ரதக்ஷிணம் சயனீயம் பரீத்ய ப்ராச்யஸ்ஸ்யந்தேரன் அபப்ரதத்ய: தத்ஸர்வ ஸம்ருத்தம்)

இந்தச் சேதனையைக் கட்டிடக் கலைஞர் மற்றும் வரைபடம், திட்டம், மதிப்பீடு செய்யும் வாஸ்து வித்தகரையும் (Engineer) வைத்துக்கொண்டு செய்தல் நலம். உத்தேசிக்கப் பட்ட இடத்தில் நடுப்பகுதியில் குழாய் மூலமாகவோ வேறு வகையிலோ தண்ணீர் பெருகச் செய்து, அந்த நீர் கிழக்கு நோக்கி வந்து சற்று தேங்கிச் சுழன்று மறுபடியும் அந்த நீர் கிழக்கு நோக்கிச் செல்லுமாயின் மையப்பகுதிக்குக் கீழ்த்திசையில் தண்ணீர் தேங்கிய இடத்தில் படுக்கையறை அமைக்க நல்லது. மறுபடி அங்கிருந்து பெருகிக் கிழக்கு நோக்கிச் சென்ற நீர் பரவியுள்ள இடம் சமையல் அறை

அமைக்க உகந்தது. இத்தகைய வீட்டில் எல்லாச் செல்வங்களும் நிறைந்து விளங்கும்.

बह्वन्नं ह भवति (பஹ்வன்னம் ஹ பவதி) பின்னால் சொல்லப்பட்ட இடத்தில் அமைக்கப்பட்ட சமையலறை ஏராளமானவர்களுக்கு உணவு சமைத்து வழங்கும் விதத்தில் சிறப்புறும். செல்வச் செழிப்புள்ளதாக அந்த வீடு அமையும் என்பது பொருள். அந்த வீடு செல்வச் செழிப்புள்ளதாக இருந்து, வீட்டின் தலைவனும் பெருந்தன்மை, கொடைத்தன்மை உள்ளவனாக இருந்தால்தானே பலருக்குச் சிறப்பாக உணவு தயாரித்து வழங்கமுடியும்.

இங்கு படுக்கையறை அமைக்கப்படும் இடத்திற்குக் கிழக்கில் (தென்கிழக்கில்) சற்றே சரிவாகவுள்ள இடம் சமையல் அறை அமைக்க உகந்ததாகக் கூறப்படுவதால் இக்கருத்து குடியிருப்பு வீடு சம்பந்தமான கருத்தாகவேதான் எண்ண வேண்டியிருக்கிறது. உணவகம், திருமண மண்டபம் போன்ற கட்டிடங்களுக்குக் கூறப்பட்ட கருத்தாக எண்ணமுடியவில்லை.

दक्षिणाप्रवणे सभां मापयेत् साऽद्यूता ह भवति ।

(தக்ஷிணாப்ரவணே ஸபாம் மாபயேத் ஸா அத்யூதா ஹ பவதி) மையப்பகுதியிலிருந்து பெருகும் தண்ணீர் கிழக்கு நோக்கிவந்து, தென்திசையில் பரவி நிற்குமாகில் அந்த இடத்தைச் சபாமண்டபமாக, விருந்தினர் வரவேற்பு அறையாக, பலர் கூடிப் பேசுவதற்குரிய சபைக்கூடமாக அமையும்விதத்தில் அளவு எடுக்கச் சொல்லவேண்டும்.

இத்தகைய இடத்தில் சபாமண்டபம் அமைக்கப்பட்டால் அந்த வீட்டில் சூதாட்டம் போன்ற முறைகேடான செயல்கள் நடைபெறாது. அத்தகைய பழக்கம் உள்ளவர்கள் அம்மாதிரி வீட்டில் குடியிருக்க நேரிட்டால் அவர்களும் முறைகேடான பழக்கம் இல்லாதவர்களாக மாறிவிடுவர். மேலும் அகால மரணமும் அத்தகைய வீட்டில் நிகழாது.

एवंविधे देशे कृता सभा स्वस्तिप्राप्तिनिमित्तभूता अद्भूता च भवति

(ஏவம் விதே தேசே க்ருதா ஸபா ஸ்வஸ்தி ப்ராப்தி நிமித்தபூதா அத்பூதா ச பவதி) அத்தகைய சபாமண்டபம் மேன்மேலும் மங்களகரமாக இருக்கும்.

இவ்வாறு வீடு அமைப்பதற்காகத் தேர்வு செய்யப்பட்ட ஸ்தலத்தின் சுற்றுப்புறத் தகுதியை அறிந்த பிறகு அந்த இடத்தின் உட்புறத்தையும் சோதனை செய்யவேண்டும்.

**HOW TO JUDGE THE PLOT :-**

**अथ एतैर्वास्तु परीक्षेत** (அத ஏதைர்வாஸ்து பரீக்ஷேத)

பின்வரும் முறைகளால் வீடு அமைக்கப்படவுள்ள இடத்தைச் சோதிக்கவேண்டும்.

जानुमात्रं गर्तं खात्वा तैरेव पांसुभिः प्रतिपूरयेत् । अधिके प्रशस्तम् । समे मध्यमम् । न्यूने गर्हितम् । (ஜானுமாத்ரம் கர்த்தம் க்காத்வா தைரேவ பாம்ஸுபி: ப்ரதிபூரயேத். அதிகே ப்ரசஸ்தம். ஸமே மத்யமம். ந்யூனே கர்ஹிதம்.) தேர்வு செய்யப்பட்ட ஸ்தலத்தில் முழங்கால் அளவு பூமியை (சதுரமாக) சதுரச்ரமாகக் குடைந்து ஒரு குழியைத் தோண்ட வேண்டும். குழியிலிருந்து மண்ணை வெளியில் எடுத்துப் போடச் சொல்லி, குழி சமசதுரமாக முழங்கால் அளவுக்கு ஆழமுள்ளதாக இருப்பதை உறுதி செய்துகொண்டு வெளியில் எடுத்துப் போடப்பட்ட மண்ணை மறுபடி அதே குழிக்குள் தள்ளி நிறப்பவேண்டும். அவ்வாறு நிறப்பும்பொழுது, குழி நிறம்பிய பிறகும் எடுத்துப் போடப்பட்ட மண் மிகுதியாக இருந்தால் அந்த ஸ்தலம் (soil) உயர்வானது என்று அறிய வேண்டும். வெளியில் எடுத்துப் போடப்பட்ட மண்ணை மறுபடி குழியில் தள்ளி மூடும்பொழுது, மண் அதிகமாகாமலும், குறையாமலும் சமமாக நின்றால் அந்த

ஸ்தலம் மத்யமம் (நடுத்தரமானது) என்று அறியவும். அந்த மண்ணைக் குழிக்குள் தள்ளி மூடும்பொழுது மண் போதாமல் மேலும் மண் தேவைப்படுமாகில் அந்த ஸ்தலம் (soil) அதமம் என்று அறிதல் வேண்டும்.

**இன்னும் ஒருவிதம் :**

अस्तमितेऽपां पूर्णं परिवासयेत् । सोदके प्रशस्तम् । आर्द्रे वार्तम् । शुष्के गार्हितम् ।। (அஸ்தமிதே஽பாம் பூர்ணம் பரிவாஸயேத். ஸோதகே ப்ரசஸ்தம். ஆர்த்ரே வார்த்தம். சுஷ்கே கர்ஹிதம) முழங்கால் அளவுள்ள சமசதுரமான அதே அளவு ஆழம் உள்ள குழி அமைத்து, சூரியன் மறைந்ததும் அந்தக் குழியை நீரால் நிறப்பவேண்டும். மறுநாள் காலையில சூரியன் உதிக்கும் நேரத்தில் அந்தக் குழியில் நீர் கொஞ்சமேனும் இருந்தால் அந்த (soil) ஸ்தலம் வாஸ்து அமைக்க உயர்வானது, நீர் உறிஞ்சப்பட்டு ஈரமாக இருந்தால் நடுத்தரமானது, நீர் வற்றி ஈரப்பதமில்லாமல் வரண்டு உலர்ந்திருந்தால் அந்த இடம் வீடு அமைப்பதற்கு உகந்ததல்ல என்று அறியவேண்டும்.

**நடைமுறையில் உள்ள சோதனை :**

தேர்வு செய்யப்பட்ட இடத்தில் முழங்கால் அளவு ஆழம் உள்ள சமசதுரமான குழியை அமைக்கச்செய்து, அதில் நீரை நிறம்பச்செய்து ஒருவரை சாதாரண வேகத்தில் ஒரு பர்லாங்கு தூரம் நடந்துசென்று திரும்பிவரச் சொல்ல வேண்டும். அவ்வாறு அந்த நபர் ஒரு பர்லாங்கு தூரம் சென்று திரும்பி வரும்பொழுது அந்தக் குழியில் ஊற்றப்பட்ட நீர் அந்தப் பள்ளத்தில் பாதியளவு இருந்தால் அந்த ஸ்தலம் Site) உத்தமம் என்றும். கால்பகுதிக்கும் சற்றுக் குறைவாக நீர் இருந்தால் மத்யமம் என்றும், நீர் வரண்டிருந்தால் அதமம் (உகந்ததல்ல) என்றும் காணலாம்.

ஸ்தல சோதனைபற்றி **"ஸமராங்கண ஸூத்ரதார"** எனும் நூலில் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது.

गोमूत्र गोमय क्षीर दधि मध्वाज्य गन्धभाक् ।
समानगन्धा मदिरा माध्वीकेभमदासवैः ।।

शालिपिष्टकगन्धैश्च धान्यगन्धैश्च या तथा ।
प्रशस्ताऽखिल वर्णानां ईदृग्गन्धा वसुन्धरा ।।

கோமூத்ர கோமய க்ஷீர ததி மத்வாஜ்ய கந்தபாக் ।
ஸமானகந்தா மதிரா மாத்வீகேபமதாஸவை:॥

சாலிபிஷ்டக கந்தைஸ்ச்ச தான்யகந்தைஸ்ச்ச யா ததா ।
ப்ரசஸ்தாऽகில வர்ணானாம் ஈத்ருக்கந்தா வஸுந்தரா ।

பசுவின் சிறுநீர், சாணம், பால், தயிர், நெய் ஆகியவற்றின் மணம் உள்ளதும்; மது (கள்), தேன், யானையின் மதஜலம், சாதம், நெல் ஆகியவற்றின் வாசனை உள்ளதுமான மண் அமைந்த ஸ்தலம் (site) இனவேறுபாடின்றி வீடு, மண்டபம், மாளிகைபோன்ற கட்டிடங்கள் அமைக்க உகந்த உயர்ந்ததாகும்.

सिता रक्ता च पीता च कृष्णा चैव क्रमान्मही ।

(ஸிதா ரக்தா ச பீதா ச க்ருஷ்ணா சைவ க்ரமான்மஹீ)

தேர்வு செய்யப்பட்டுள்ள ஸ்தலத்தின் அடியில் உள்ள மண் வெண்மை நிறம், சிவப்பு, மஞ்சள், கருப்பு ஆகிய நிறம் உள்ளதாக இருத்தல் உத்தமம்/மத்யமம்/அதமம்/கூடாது என்ற வரிசைப்படிக்கான தகுதியுள்ளவையாம். இதேபோல் அடி மண்ணில் சுவை இருப்பின் அவ்வைகயிலான ஸ்தலம் (site) பின்னால் கூறப்பட்டதுபோன்ற வரிசைப்படிக்கான தகுதி உள்ளதாகும்.

சிலவகை ஸ்தலங்கள் Plot (Site) விலக்கத்தக்கதாகக் கூறப்பட்டுள்ளன. ஸமராங்கண ஸூத்ரதார நூலில் போஜ மன்னன் கூறுவது :

इदानीं अप्रशस्तानां भुवां लक्ष्माभिदध्महे ।
भस्माङ्गार कपालास्थि तुषाकेश विषाश्मभिः ।
मूषकोत्करवल्मीकशर्कराभिश्च निर्भरा ।।

रुक्षाऽप्ररोहिणी निम्ना भङ्गुरा सुषिरोषरा ।
वामावर्तजलस्राविण्यसारा विषमोन्नता ।।

कटुकण्टकिनिःसार शुष्क निष्फलपादपा ।
क्रव्यात्पक्षिसमाकीर्णा कृमिकीटवती च या ।।

இதானீம் அப்ரசஸ்தானாம் புவாம் லக்ஷ்மாபிதத்மஹே ।
பஸ்மாங்கார கபாலாஸ்த்தி துஷாகேச விஷாச்மபி:।
மூஷகோத்கர வல்மீக சர்க்கராபிஸ்ச்ச நிர்பரா ॥

ருக்ஷாऽப்ரரோஹிணீ நிம்னா பங்குரா ஸுஷிரோஷா ।
வாமாவர்த்தஜலஸ்ராவிண்யஸாரா விஷமோன்னதா ॥

கடுகண்டகி நிஸ்ஸார சுஷ்க நிஷ்ப்பலபாதபா ।
க்ரவ்யாத்பக்ஷிஸமாகீர்ணா க்ருமிகீடவதீ ச யா ॥

**தரமில்லாத பூமியை(site)ப்பற்றி**
**அதற்கான அடையாளங்களைக் கூறிகிறோம்.**

தேர்வு செய்யப்பட்ட ஸ்தலத்தை உழுது சமன்படுத்தும் பொழுது சாம்பல் கரி பாதி எரிந்தும் பாதி எரியாததுமான கரிக்கட்டை, மண்டை ஓடு, எலும்பு, உமி, பதறு, தலைமயிர், கோணல்மாணலான (சீராக இல்லாத) செம்பூறாங்கல் போன்ற பாறாங்கற்கள், எலி வளைகள், கரையான் புற்று, பெறுமணல் முதலானவை உள்ளதாகத் தெரியவந்தால் அந்த பூமி கட்டிடங்கள் வீடுகள், பங்களாக்கள், ஆலயங்கள் அமைப்பதற்கு உரியதல்ல. மேலும், ஒரு அடி அல்லது முழங்கால் அளவுக்குச் சதுரமான குழிபறித்து மலர்த்தூவி தண்ணீர் விடும்பொழுது அத்தண்ணீர் இடதுபுறமாகச்

சுழன்றால் அந்த பூமியும் விலக்கத்தக்கதே. மேலும், அதிகம் மேடுபள்ளங்கள் உள்ள, முட்கள் நிறைந்ததும், எருக்கை போன்றதும், பலமில்லாததும், பலன் தராத மலட்டுத்தனம் உள்ளதுமான மரங்கள் உள்ள பூமியும், கழுகு, பருந்து போன்ற புலால் உண்ணும் பறவைகள் சூழ்ந்த (கூடிகட்டி வசிக்கக்கூடிய மரங்கள் உள்ள) இடமும், அதிகம் புழுக்கள், பூச்சிகள் உள்ளதுமான இடமும் கட்டிடங்கள் அமைப்பதற்கு உகந்தவையல்ல.

பூமி பரீக்ஷையில் (Examivation of Site) ஸ்தலத்தின் இயற்கை நிலைபற்றி அறிவது மிகவும் முக்கியமான தொன்றாகும். வாஸ்து வித்யை எனும் நூலில் இதுபற்றி விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

अथातो वास्तुविद्यां वै प्रवक्ष्यामि यथापुरम् ।
पूर्वं भूमिं परीक्षेत पश्चाद्वास्तुं समारभेत् ।।
भुवः प्लवं प्रवक्ष्यामि नराणां च शुभाशुभम् ।।

(Vastu Vidya - Chap. II)

அதோதோ வாஸ்துவித்யாம் வை ப்ரவக்ஷ்யாமி யதாபுரம் ।
பூர்வம் பூமிம் பரீக்ஷேத பச்சாத்வாஸ்தும் ஸமாரபேத் ।
புவ: ப்லவம் ப்ரவக்ஷ்யாமி நராணாம் ச சுபாசுபம் ॥

சமீப காலமாக வீடுகள், மண்டபங்கள், அமைப்பதற்காகத் தேர்வு செய்யப்படும் இடங்களின் பூர்விக இயற்கை அமைப்புபற்றி அறியமுடிகிறதில்லை. நகரங்களை ஒட்டியுள்ள இடங்களில் வீடுகள் அமைப்பதாற்காக ஸ்தலத்தை வாங்கி அளவிட்டு நான்கு எல்லைகளிலும் கற்களை அமைத்து விற்பனை செய்யும் **ரியல் எஸ்டேட்** நிறுவனத்தினர் ஒரு ஸ்தலத்தை வாங்கியவுடன் புல்டோஸர் / டிராக்டர் போன்ற இயந்திரங்களைக்கொண்டு மேடுபள்ளமாக உள்ள இடங்களை சமன்படுத்திவிடுகிறார்கள். அந்த ஸ்தலங்களின் பூர்விக இயற்கை நிலைபற்றி அறிந்துகொள்ள முடிகிறதில்லை. ஸ்தலத்தின் பூர்விக இயற்கை நிலைபற்றி

அறியாமல் கிடைத்த ஸ்தலத்தில் (Site) அமைக்கப்படும் சில / பல வீடுகள் பங்களாக்கள் விருத்திக்கு வராமல் போகின்றன. சிலவற்றில் வசிப்பவர்கள் நோயால் துயர்பட நேரிடுகிறது. வழக்குகள், திருட்டுகள் நடக்க ஏதுவாகின்றன. அதிருஷ்டவசமாகச் சிலருக்குத்தான் வீடுகள் மங்களகரமாக விளங்குகின்றன.

பூமி சமன் செய்யப்படாமல் இருந்தால் அந்தக் குறிப்பிட்ட ஸ்தலத்தில் மையப்பகுதியிலிருந்து எந்தப் பகுதி மேடாக உள்ளது, எந்தப் பகுதி தாழ்வாக உள்ளது என்பதைக் கண்டுகொண்ட பிறகுதான் வாஸ்து தொடர்பான பணிகளை - திசை அறிதல்-போன்ற பணிகளையும், பிற வேலைகளையும் தொடங்கவேண்டும். சொல்லப்போனால் வாஸ்து அமைக்கும் சொந்தக்காரரும், வாஸ்து அமைக்கும் கலைஞரும் திட்டம் தீட்டி வரைபடம் தயாரிக்கும் இஞ்சினியரும் கூடியிருந்து முதன்முதல் மேற்கொள்ளப்படவேண்டிய பணி இதுவே ஆகும்.

இதுபற்றி வாஸ்து வித்யா என்னும் ஸம்ஸ்கிருத நூலின் இரண்டாவது அத்தியாயத்தில் 2-வது ச்லோகம் முதல் 32-வது ச்லோகம் முடியவுள்ள பகுதியில் கூறப்பட்ட கருத்துக்கள் பின்வருமாறு : The Vastu Vidya - Edited by T. Ganapati Sastri, Trivandrum. Printed at the Travancore Government Press in 1913.

पूर्वप्लवा वृद्धिकरी उत्तरा धनदा तथा . . . . . || 2

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

ईशानोच्चं महाक्लेशं वास्तु विद्यादिति क्रमात् || 32

பூர்வப்லவா வ்ருத்திகரீ உத்தரா தனதா ததா |

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

ஈசானோச்சம் மஹாக்லேசம் வாஸ்து வித்யாத் இதி க்ரமாத் |

தேர்வு செய்யப்பட்ட ஒரு மனையின் மையப்பகுதியிலிருந்து கிழக்குப் பகுதி கொஞ்சங்கொஞ்சமாகத் தாழ்ந்ததாக (slope)

இருந்தால் அவ்விடத்தில் அமைக்கப்படும் வீடு மேன்மேலும் விருத்தியடையும். வடக்கில் தாழ்ந்திருந்தால் செல்வம் வளர்ச்சி அடையும். மேற்கில் தாழ்ந்ததாக இருப்பின் அவ்விடத்தில் அமைக்கப்படும் வீடு செல்வ அபிவிருத்தி தராததாகவும், தெற்கில் தாழ்ந்ததாக இருந்து அவ்விடத்தில் வீடு அமைக்கப்படுமானால் அதில் வசிப்பவர்கள் மோசமான விளைவுகளை அனுபவிக்கலாகும்.

இவ்வாறு உயர்ந்து தாழ்ந்துள்ள பகுதிகளுக்கு ஒவ்வொரு பெயர் தரப்பட்டுள்ளது.

| ஸ்தலத்தின் மேடான பகுதி | ஸ்தலத்தின் தாழ்வான பகுதி | வாஸ்துவின் பெயர் | தரம் |
|---|---|---|---|
| **மையத்தின்** | | | |
| மேற்கு | கிழக்கு | கோ வீதி | வளர்ச்சி தரும் உயர்ந்தது. |
| தெற்கு | வடக்கு | கஜ வீதி | செல்வ வளர்ச்சி தரும் |
| கிழக்கு | மேற்கு | ஜல வீதி | அதமம் செல்வம் அழியும் |
| வடக்கு | தெற்கு | யம வீதி | அதமம் |
| வடகிழக்கு | தென்மேற்கு | பூத வீதி | அதமம் |
| தென்கிழக்கு | வடமேற்கு | நாக வீதி | உயர்வானது |
| வடமேற்கு | தென்கிழக்கு | வைச்வானரம் | அதமம் |
| தென்மேற்கு | வடகிழக்கு | தன வீதி | சுபம் |
| கிழக்கு, தென்கிழக்கு | மேற்கு வடமேற்கு | பைதாமஹ | சுபம் |

| ஸ்தலத்தின் மேடான பகுதி | ஸ்தலத்தின் தாழ்வான பகுதி | வாஸ்துவின் பெயர் | தரம் |
|---|---|---|---|
| தெற்கு, தென்கிழக்கு | வடக்கு வடமேற்கு | ஸுபதம் | மிக உயர்ந்தது |
| தென்மேற்கு, தெற்கு | வடக்கு, வடகிழக்கு | தீர்க்காயுஸ் | உயர்ந்தது |
| மேற்கு, தென்மேற்கு | கிழக்கு, வடகிழக்கு | புண்யகம் | சுபம் |
| மேற்கு, வடமேற்கு | கிழக்கு, தென்கிழக்கு | அபதம் | பகை, கலஹம் |
| வடக்கு, வடமேற்கு | தெற்கு, தென்கிழக்கு | ரோகபதம் | அசுபம் |
| வடக்கு, வடகிழக்கு | தெற்கு, தென்மேற்கு | அர்களம் | பாபங்கள் விலகும் |
| வடகிழக்கு, கிழக்கு | மேற்கு தென்மேற்கு | ச்மசானம் | அதமம் |
| தென்மேற்கு, வடமேற்கு, வடகிழக்கு | தென்கிழக்கு | ச்யேனகம் | அசுபம் |
| வடகிழக்கு, தென்கிழக்கு, மேற்கு | தென்மேற்கு | நாய்முகம் | தரித்திரம் |
| தென்மேற்கு, தென்கிழக்கு, வடகிழக்கு | கிழக்கு, தென்கிழக்கு | ப்ரம்மகினம் | அசுபம் |
| தென்கிழக்கு | தென்மேற்கு, வடகிழக்கு, வடமேற்கு | ஸ்தாவரம் | சுபம் |

| ஸ்தலத்தின் மேடான பகுதி | ஸ்தலத்தின் தாழ்வான பகுதி | வாஸ்துவின் பெயர் | தரம் |
|---|---|---|---|
| தென்மேற்கு | தென்கிழக்கு, வடமேற்கு, வடகிழக்கு | ஸ்த்தண்டிலம் | சுபம் |
| வடகிழக்கு | தென்கிழக்கு, தென்மேற்கு, வடமேற்கு | சாண்டுலம் | அசுபம் |
| தென்மேற்கு, தென்கிழக்கு, வடகிழக்கு | வடக்கு | ஸுஸ்தானம் | சுபம் |
| தென்மேற்கு, மேற்கு, வடமேற்கு | கிழக்கு | ஸுலபம் | அரசு அலுவலகம் அமைக்க நல்லது |
| வடக்கு, வடகிழக்கு, வடமேற்கு | தெற்கு | வாஸ்துசரம் | வியாபார ஸ்தலம் அமைக்க உகந்தது. |
| வடகிழக்கு, கிழக்கு, தென்கிழக்கு | மேற்கு | சிவமுகம் | சுபம் |

வடதிசையில் தாழ்ந்தும் நாணல், தர்ப்பைப்புல் முளைத்ததாகவும் அந்த இடத்தில் உள்ள அடிமண் நெய்வாசனை உள்ளதாகவும் இருப்பின் யாகங்கள், அக்னி வழிபாடு செய்பவர்களுக்கு உகந்தது. தேர்வு செய்யப்பட்ட இடம் சமதலமாக இருக்க தென்கிழக்கு மட்டும் தாழ்ந்து பள்ளமாக இருப்பின் அமைக்கப்படும் வீட்டினால் பொருள் செலவுதான் மிகும். அந்த வீட்டில் குடிபுகுவோர் செல்வ வளமின்றி ஏழ்மையுடன் இருக்கலாகும். இதேபோன்று மனையின் பிற பகுதிகள் சமதளமாக இருக்க, தெற்குப் பகுதி

மட்டும் மேடாக இருப்பின் அங்கு கட்டப்படும் வீட்டில் குடிபுகுவோர் நோயற்ற வாழ்வு பெறுவர். இவ்வாறே தென்மேற்குப் பகுதி மட்டும் உயர்ந்து பிறபகுதிகள் யாவும் சமதளமாக இருக்க தென்மேற்கில் வீடுகட்டுவோர் பெரும் செல்வம் பெறுவர். இவ்விதமே மேற்கு திசை மட்டும் மற்ற சமதளப்பகுதிக்காகச் சற்று மேடாக இருப்பின்அங்கு வீடு கட்டுவோர் ஸந்ததி குல விருத்தி பெறுவர். வடமேற்கு திசை மட்டும் மற்ற பகுதிகளுக்காகச் சற்று மேடாக இருப்பின் அங்கு வீடு கட்டுவோர் பொருள் இழப்பைச் சந்திக்கலாகும். வடதிசைப் பகுதி மட்டும் உயர்ந்து, பிறபகுதிகள் சமதளமாக இருப்பின் அங்கு வடதிசைப் பகுதியில் வீடு கட்டுவோர் நோய்களால் துன்புறலாகும். வடகிழக்கு திசை மட்டும் சற்று உயர்ந்து பிறபகுதிகள் சமதளமாக இருக்க அவ்விடத்தில் வீடு கட்டுவோர் பெருந்துயரங்களைச் சந்திக்கலாகும் என்பதாக வாஸ்து வித்தை அறிந்தவர்கள் கூறுகிறார்கள். (காண்க : **வாஸ்து வித்யை** - Edited by T. Ganapathi Sastri, Trivandrum, 1913) தேர்வு செய்யப்பட்ட வாஸ்துவில் (மனையில்) கிழக்கில் அரசமரம் இருப்பதும், தெற்கில் அத்திமரம் இருப்பதும், மேற்கு திசையில் ஆலமரம் இருப்பதும், வடதிசையில் பிச்சி மரம் (ப்லக்ஷ) இருப்பதும் உயர்ந்தது. மாறாக கிழக்கில் ஆலமரமும், தெற்கில் பிச்சிமரமும், மேற்கில் அரசமரமும், வடக்கில் அத்திமரமும் இருந்தால் ஆகாது.

மேலும், தேர்வு செய்யப்பட்ட வாஸ்து மனையை சமன் படுத்துவதற்காக நல்ல திடமான காளை மாடுகளைக் கொண்டும். விதிமுறைப்படிச் செய்யப்பட்ட கலப்பை கொண்டும், நல்லதொரு நாளில் மனை நிலத்தை உழும் பொழுது, அந்த பூமியிலிருந்து மரத்துண்டுகள் கிடைத்தால் அவ்விடத்தில் கட்டப்படும் வீட்டிற்கு அக்னி பயம் ஏற்படும். தெய்வத் திருமேனிகள் கிடைத்தால், அங்கு வீடு கட்டுகிறவருக்குச் செல்வம் பெரும். கரிக்கட்டைகள், கரி கிடைத்தால் அங்கு வீடு அமைத்து வசிக்கும் குடும்பத்தினருக்கு நோய் விருத்தி ஏற்படும். நெல் பதறுகள் போன்றவை கிடைத்தால் அங்கு வீடுகட்டுகிறவருக்குச் செல்வ நாசம்.

வாஸ்து சோதனைபற்றி, பன்னிரு சதகத்திரட்டு எனும் நூலில் "கயிலாதநாதர் சதகம்" 68வது செய்யுள் கூறுவதாவது -

"மனைகோலவே குழிகள் கெல்லி நீர்விட்டுமேன்
மலர்தூவ வலமாகில்
வாழ்விடம்புறஞ் சுற்றிடிற் பகையதாம்
வண்டு புழுகாணிற் றீதாஞ்
சினயாகு சிலைகாணிலாக்கமாஞ் செங்கனிதி
சீராணை நண்டு பல்லி
தேரை இலந்தியாம் பூச்சியிவை கண்டிடிற்
செம்மையாம் மனை கடாந்
தனதாமை பாம்பு தேளுடும்பு புலி பூரமிவை
தாங்கணின் மனைகள் பாழாஞ்
சங்குகன யோகமாம் வேர்கள் காணப்பொரு-
டப்பாது சேதமாகுங்
கனமனைகள் கோல்பவர்க்கிவை நல்ல சகுனமாங்
கற்பக விராச மேவுங்
கங்கை புனையீசனே மங்கை மகிழ்நேசனே
கயிலையங்கிரி வாசனே"

மேலும், மல்லிகை முல்லை போன்ற மலர்க்கொடிகள் சுற்றிய மரங்களும், மாதுளை, வில்வம் போன்ற தாவரங்களும், திராக்ஷைக் கொடிகளும் வளரும் பூமி கட்டிட நிர்மாணத்திற்கு மிகவும் உகந்த இடமாகும்.

மேலும், பசுக்கள், காளைகள், குதிரைகள், செம்மறி ஆடுகள், யானைகள் கட்டப்பட்டிருந்த இடங்கள், புறாக்கள், கிளிகள், குயில்கள், மயில்கள் வசிக்கும் இடங்கள் ஆகியவை எல்லாவிதமான வாஸ்துக்களும் அமைக்க உகந்த இடமாகும்.

மேலும், மிருதுவான மணலுள்ளதும், 10 அடி முதல் 20 அடி ஆழத்திற்குள் சுவையுள்ள நீர் கிடைப்பதாகவும், நெய், தேன், மலர்களின் மணம் உள்ளதும், தோண்டும்பொழுது ஒரே நிறமுள்ள மண் உள்ளதுமான பூமி எல்லாவிதமான

கட்டிடங்களும் அமைக்க உகந்தது. இவ்வாறு விச்வகர்ம வாஸ்து சாஸ்திரம் 5வது அத்யாயத்தில் கூறப்பட்டுள்ளது.

धेनुभिर्हरिणैर्वापि तुरगैर्वा विशेषतः ।
पारावतैः कोकिलैर्वा मयूरै राजहंसकैः ।।

गजैर्वा वृषभैर्वापि मेषसङ्घैर्विशेषतः ।
भूमिरध्युषिता शस्ता सर्ववास्तुषु कीर्तिता ।।

लघुसैकत संयुक्ता सुखस्पर्शयुतापि वा ।
निबिडा स्वादुतोयाढ्या समीपजलवार्षिणी ।।

मधुगन्धा पुष्पगन्धा सर्पिर्गन्धा च भूरपि ।
स्थिरवर्णा च भूः शस्ता सर्ववास्तुषु कीर्तिता ।।

(वि. वाः अध्या. ५)

தேனுபிர்ஹரிணைர்வாபி துரகைர்வா விசேஷத:।
பாராவதை: கோகிலைர்வா மயூரை: ராஜஹம்ஸகை:॥

கஜைர்வா வ்ருஷபைர்வாபி மேஷஸங்கைர்விசேஷத:।
பூமிரத்யுஷிதா சஸ்தா ஸர்வவாஸ்துஷு கீர்த்திதா ।

லகுஸைகத ஸம்யுக்தா ஸுகஸ்பர்சயுதாபி வா ।
நிபிடா ஸ்வாதுதோயாட்யா ஸமீபஜலவர்ஷிணீ ॥

மதுகந்தா புஷ்பகந்தா ஸர்பிர்கந்தா ச பூரபி ।
ஸ்திரவர்ணா ச பூ: சஸ்தா ஸர்வவாஸ்துஷு கீர்த்திதா ॥

விச்வகர்ம வாஸ்து சாஸ்திரம். அத்யா. 5

வாஸ்து சோதனைபற்றி விச்வகர்ம வாஸ்து சாஸ்திரத்தில் கூறப்படும் மற்றொரு செய்தியாவது - எள்ளு, பயறு, உளுந்து போன்ற தானியங்களை விதைத்தால் மூன்று நாட்களுக்குள் முளைவிட்டு வளரச்செய்யும் பூமி மிகவும்

உத்தமம். அந்த விதைகள் ஐந்து நாட்களுக்கு முளைவிட்டு வளருமானால் அந்த பூமி நடுத்தரமானது. அவ்வாறு ஐந்து நாட்களாகியும் முளைவிடாத பூமி விலக்கத்தக்கதாம்.

सा भूमिरुत्तमा ज्ञेया त्रिरात्राङ्कुरवर्धिनी ।
सा मध्यमा च विज्ञेया पञ्चरात्राङ्कुरप्रदा ।।

मन्दाङ्कुरप्रदा भूमिरधमा चेति गद्यते ।
सा वर्ज्या सर्वकार्येषु बीजानां क्षयकारिणी ।।

(वि. वा. शा. अध्या. ५)

ஸா பூமிருத்தமா க்ஞேயா த்ரிராத்ராங்குரவர்திநீ ।
ஸா மத்யமா ச விக்ஞேயா பஞ்சராத்ராங்குரப்ரதா ॥

மந்தாங்குரப்ரதா பூமிரதமா சேதி கத்யதே ।
ஸா வர்ஜ்யா ஸர்வகார்யேஷு பீஜாநாம் க்ஷயகாரிணீ ॥

(வி. வா. ஷா. அத்யா. 5)

விலக்கத்தக்க பூமிபற்றிக் குறிப்பிடுகையில் முட்கள் மிகுந்த தாவரங்கள், வரட்சிதரும் கொடிய பால் உள்ள தாவரங்கள், புளிய மரங்கள் போன்றவை உள்ள இடங்களும், புற்றுக்கள் சிறுசிறு துளைகள் (துவாரங்கள்) பெரும்பள்ளங்கள் உள்ள இடங்களும், தோண்டினால் எலும்புகள் கிடைக்கும் இடங்களும் வீடுகள், பிற கட்டிடங்கள் அமைப்பதற்கு உகந்த இடங்களல்ல.

वर्ज्या कण्टकवृक्षैश्च तिग्मवृक्षैर्विदारकैः ।
वल्मीकेन समायुक्ता भूमिरस्थिगणैस्तु वा ।
रन्ध्रान्विता च भूर्वर्ज्या गर्ताद्यैश्च समन्विता ।

வர்ஜ்யா கண்டகவ்ருக்ஷைஸ்ச்ச திக்மவ்ருக்ஷைர்விதாரகை:।
வல்மீகேன ஸமாயுக்தா பூமிரஸ்த்திகணைஸ்து வா ॥
ரந்த்ராந்விதா ச பூர்வர்ஜ்யா கர்தாத்யைஸ்ச்ச ஸமன்விதா ॥

மேலும், பன்றிகள், கழுதைகள், புலிகள், சிங்கம், கரடிகள், காட்டுப்பூனைகள், பெருச்சாளிகள்,

நண்டுவாய்காலிகள், கொடும் தேள்கள், ஜலமண்டலி போன்றவை வசிக்கும் இடங்கள், தீமை தருவதாகும் என்பதால் எந்த ஒரு கட்டிடமும் அமைப்பதற்கு உகந்ததல்ல.

वराहै रासभैर्व्याघ्रैः सिह्माद्यैर्दुष्टजन्तुभिः ।
भल्लूकैर्वनमार्जालैर्मूषकैर्वृश्चिकादिभिः ।
भूमिरध्युषिता वर्ज्या सर्ववास्तुषु हानिदा ।।

வராஹை ராஸபைர்வ்யாக்ரை: ஸிஹ்மாத்யைர்துஷ்ட ஜந்துபி: ।
பல்லூகைர்வநமார்ஜாலைர்மூஷகைர்வ்ருஸ்சிகாதிபி: ।
பூமிரத்யுஷிதா வர்ஜ்யா ஸர்வவாஸ்துஷு ஹாநிதா ॥

மேலும், சுடுகாடு, இடுகாடுகளுக்கு அருகில் உள்ளதும், பெரும் அளவு பதறுகள் (பூமிக்கு அடியில்) உள்ளதும் அதிர்ச்சியால் பிளவுபட்டதும் (பூகம்பம் போன்றவற்றால் பிளவுபட்ட இடம்) கோடையில் வெயில் மிகுதியால் ஏற்பட்ட அகலமான வெடிப்புக்கள் உள்ளதும் (இந்நாட்களில் நகர்களின் புறப்பகுதியில் உள்ள நஞ்சை நிலங்களும், கட்டிடம் கட்டுவதற்கான இடங்களாக மாற்றப்படுகின்றன. சில நஞ்சை நிலங்களிலும் அதிக ஆழமான வெடிப்புக்கள் ஏற்பட்டுவிடுவது பலரும் அறிந்த உண்மையாகும்.) சுண்ணாம்பு, செங்கற்கள் சுடும் காளவாய், மண்பாண்டம் சுடும் இடங்கள் ஆகிய ஸ்தலங்கள் குடியிருப்புக் கட்டிடங்கள் கட்டுவதற்கு உரியனவல்ல.

स्मशानभूसमीपस्था तुषाभारैः समन्विता ।
कम्पेन भेदिता भूमिरग्निदग्धा च सर्वतः ।
भूमिरेवंविधा वर्ज्या कार्यज्ञैश्च शुभेप्सुभिः ।।

ஸ்மசாநபூஸமீபஸ்தா துஷாபாரை: ஸமந்விதா ।
கம்பேந பேதிதா பூமிரக்நிதக்தா ச ஸர்வத: ।
பூமிரேவம்விதா வர்ஜ்யா கார்யக்ஞைஸ்ச்ச சுபேப்ஸுபி: ॥

பூமிப்பகுதி நான்கு வகைப்பட்டதாகக் கூறப்படுகிறது. அவை, (1) கஜ ப்ருஷ்ட்டம், (2) கூர்ம ப்ருஷ்ட்டம், (3) தைத்ய ப்ருஷ்ட்டம், (4) நாகப்ருஷ்ட்டம் என்பதாம்.

**गजपृष्ठम्** - इदं शुभकरम्

दक्षिणे पश्चिमेचैव नैऋत्ये वायुकोणके ।
एभिरुच्चो भवेद्भूमौ गजपृष्ठं विधीयते ।।

गजपृष्ठे भवेद्वासः स लक्ष्मीधनपूरितः ।
आयुर्वृद्धिकरो नित्यं जायते नात्र संशयः ।।

**கஜப்ருஷ்டம்** - இதம் சுபகரம்

தக்ஷிணே பஸ்சிமேசைவ நைர்ருத்யே வாயுகோணகே ।
ஏபிருச்சோ பவேத் பூமௌ கஜப்ருஷ்டம் விதீயதே ॥

கஜப்ருஷ்டே பவேத்வாஸ: ஸ லக்ஷ்மீதநபூரித: ।
ஆயுர்வ்ருத்திகரோ நித்யம் ஜாயதே நாத்ர ஸம்சய: ॥

ஸ்தலத்தின் மையப்பகுதிக்குத் தெற்கு, மேற்கு, தென்மேற்கு, வடமேற்கு திசைகளில் பூமி சற்று மேடாக இருந்தால் அந்த இடம் **கஜ ப்ருஷ்டம்** எனப்படும். அத்தகைய இடத்தில் வீடு அமைத்து வசிப்பவர் எல்லாவகைச் செல்வவளமும் நிறைந்தவராக இருப்பதுடன் நீண்ட ஆயுள் உள்ளவராகவும் இருப்பர்.

**कूर्मपृष्ठम्** - इदं शुभकरम्

मध्येऽत्युच्चं भवेद्यत्र नीचं चैव चतुर्दिशम् ।
कूर्मपृष्टं भवेद्भूमिः तत्र वासो विधीयते ।।

कूर्मपृष्ठे भवेद्वासः नित्योत्साहसुखप्रदः ।
धनधान्यं भवेत्तस्य निश्चितं विपुलं धनम् ।।

**கூர்ம ப்ருஷ்டம்** - இது சுபமானது

மத்யேऽத்யுச்சம் பவேத் யத்ர நீசம் சைவ சதுர்திசம் ।
கூர்மப்ருஷ்டம் பவேத்பூமி: தத்ர வாஸோ விதீயதே ॥

கூர்மப்ருஷ்டே பவேத் வாஸ: நித்யோத்ஸாஹஸுகப்ரத: ।
தனதான்யம் பவேத் தஸ்ய நிஸ்ச்சிதம் விபுலம் தனம் ॥

தேர்வு செய்யப்பட்ட அல்லது ஒரு ஸ்தலத்தின் மையப் பகுதிமட்டும் மேடாகவும், அதன் நான்கு திசைப்பகுதிகளும் தாழ்ந்தும் இருப்பின் அந்த ஸ்தலம் **கூர்ம ப்ருஷ்ட்டம்** எனப்படும். அத்தகைய இடத்தில் (கூர்ம ப்ருஷ்டத்தில்) வீடு அமைத்து வசித்தால் எந்நாளும் உற்சாகம், சௌக்யம் ஏற்படும். தன-தான்ய விருத்தி ஏற்படும்.

**दैत्यपृष्ठम्** - अशुभम्

पूर्वाग्निशम्भुकोणे तु उन्नतिश्च यदा भवेत् ।
पश्चिमे च यदा नीचं दैत्यपृष्ठं विधीयते ।।

दैत्यपृष्ठे भवेद्वासः लक्ष्मीर्नायाति मन्दिरे ।
धनधान्यपशूनां च हानिरेव न संशयः ।।

**தைத்யப்ருஷ்ட்டம்** - அசுபம்

பூர்வாக்னிசம்புகோணே து உன்னதிஸ்ச்ச யதா பவேத் ।
பஸ்சிமே ச யதா நீசம் தைத்யப்ருஷ்ட்டம் விதீயதே ॥

தைத்யப்ருஷ்ட்டே பவேத்வாஸ: லக்ஷ்மீர்நாயாதி மந்திரே ।
தனதான்யபசூனாம் ச ஹானிரேவ ந ஸம்சய: ॥

மனையின் மையப்பகுதிக்குக் கிழக்கு, தென்கிழக்கு, வடகிழக்கு திசைகளில் பூமி உயர்ந்தும், மேற்குப் பகுதி தாழ்ந்தும் இருந்தால் அந்த பூமி **தைத்ய ப்ருஷ்ட்டம்** எனப்படும். அத்தகைய இடத்தில் வீடு அமைத்து வசித்தால்

அந்த வீட்டின் உள்ளே லக்ஷ்மீ நுழையமட்டாள். பொருள் நஷ்டம் நிச்சயம் ஏற்படும்.

**नागपृष्ठम्** - अशुभावहं इदम्

पूर्वपश्चिमयोर्दैर्घ्यं दक्षिणोत्तर उच्चता ।
नागपृष्ठो विजीनीयात् कर्तुरुच्चाटनं भवेत् ।।

नागपृष्ठे यदा वासः मृत्युरेव न संशयः ।
पत्नीहानिः पुत्रहानिः शत्रुवृद्धिः पदे पदे ।।

**நாகப்ருஷ்ட்டம்** - அசுபம் - ஆபத்தானது

பூர்வபஸ்சிமயோர்தைர்க்யம் தக்ஷிணோத்தர உச்சதா ।
நாகப்ருஷ்ட்டோ விஜீனீயாத் கர்த்துருச்சாடனம் பவேத் ॥

நாகப்ருஷ்ட்டே யதா வாஸ: ம்ருத்யுரேவ ந ஸம்சய: ।
பத்னீஹானி: புத்ரஹானி: சத்ருவ்ருத்தி: பதே பதே ॥

கிழக்கு-மேற்கு நீண்டும், மையத்தின் தெற்கு-வடக்குப் பகுதி உயர்ந்தும் உள்ள பூமி நாகப்ருஷ்ட்டம் எனப்படும். அத்தகைய ஸ்தலத்தில் குடியிருப்பு வீடு அமைப்பது ஆபத்தை விளைவிக்கும். குடிபுகுவோர் விரைவில் வெளியேறிவிடுவர். மனைவி, மக்களுக்குத் தீமை தருவதாக இருக்கும். தவிர, பகைவர் அதிகமாகலாம். இதுதொடர்பாக **மயமதம்** நூலில் கூறப்படும் கருத்துக்கள் பின்வருமாறு.

(இதற்கு முன்னால் கூறப்பட்ட கருத்துக்களும், மயமதத்தில் உள்ள கருத்துக்களும் ஒன்றாக இருக்கலாம். புதுமையான கருத்துக்களும் இருக்கலாம். எனவே, வாசகர்கள் "கூறியது கூறல்" என்று வாசகர்கள் எண்ணலாகாது. பல நூல்களிலும், வாஸ்து சம்பந்தமாகக் கூறப்பட்டுள்ள கருத்துக்களைத் தொகுத்ததில் கூறுவதே இந்நூலின் நோக்கமாகும் என்பதால் பிசைந்த மண்ணையே இவர்

பிசைகிறாரே என்று எண்ணவேண்டாம் என்று பணிவுடன் கேட்டுக்கொள்கிறோம்- பதிப்பாசிரியர்.)

वस्त्वाकृतिरनिन्द्या साऽवाक् प्रत्यक् दिक्समुन्नता ।
हयेभवेणु वीणाब्धि दुन्दुभिस्वन संयुता ।।

पुन्नागजातीपुष्पाब्ज धान्यपाटलगन्धकैः ।
पशुगन्धसमा श्रेष्ठा सर्वबीजप्ररोहिणी ।

வஸ்த்வாக்ருதிரநிந்த்யா ஸாऽவாக் ப்ரத்யக் திக்ஸமுன்னதா ।
ஹயேபவேணு வீணாப்தி துந்துபிஸ்வன ஸம்யுதா ॥

புன்னாகஜாதீபுஷ்பாப்ஜ தான்யபாடலகந்தகை: ।
பசுகந்தஸமா ச்ரேஷ்டா ஸர்வபீஜப்ரரோஹிணீ ॥

பூமியின் வடிவமானது குற்றமற்றதாயும் (குறை சொல்லும் விதத்தில் இல்லாததாகவும்), தெற்கில் அல்லது மேற்கில் உயர்ந்ததாயும் உள்ள பூமி உயர்ந்ததாகும்.

குதிரை, யானை, மூங்கில் (புல்லாங்குழல்) வீணை, கடல், துந்துபி வாத்தியம் இவற்றின் சப்தம் போன்றவற்றின் சப்தம் உடையதும், புன்னை, ஜாதி, முல்லைமலர், தாமரை மலர், நெல், பாதிரிப்பூ ஆகியவற்றின் நறுமணம் உடையதும், பசுவின் வாசனைப் போன்றே வாசனையுடையதும் எல்லாவகையா தானியங்களும் முளைக்கக்கூடியதுமான பூமி உத்தமமான தாகும்.

एकवर्णा घना स्निग्धा सुख संस्पर्शनान्विता ।
बिल्वो निम्बश्च निर्गुण्डी पिण्डितः सप्तपर्णकः ।
सहकारश्च षड्वृक्षैरारूढा या समस्थला ।।

ஏகவர்ணா கனா ஸ்நிக்தா ஸுக ஸம்ஸ்பர்சனான்விதா ।
பில்வோ நிம்பஸ்சச நிர்குண்டீ பிண்டித: ஸப்தபர்ணக: ।
ஸஹகாரஸ்ச்ச ஷட்வ்ருக்ஷைராரூடா யா ஸமஸ்தலா ॥

ஒரேவிதமான நிறம் உள்ளதும், அழுத்தமானதும், பசையுள்ளதும், தொடுவதற்கு இதமாய் சுகமளிப்பதாயும் உள்ள பூமி சிறந்ததாகும். வில்வம், வேம்பு, நொச்சி, பிண்டிகம் (மருக்கரை), ஏழிலம்பாலை, ஒட்டு மாமரம் (கட்டி மாமரம்) ஆகிய இந்த ஆறுவகை மரங்களும் முளைத்து சமதலமாக இருப்பதும்

श्वेता रक्ता च पीता च कृष्णा कापोत सन्निभा ।
तिक्ता च कटुका चैव काषायलवणाम्लका ।।
मधुरा षड्रसोपेता सर्वसम्पत्करी धरा ।
प्रदक्षिणोदकवती वर्णगन्धरसैः शुभा ।।

ச்வேதா ரக்தா ச பீதா ச க்ருஷ்ணா காபோத ஸந்நிபா ।
திக்தா ச கடுகா சைவ காஷாயலவணாம்லகா ॥
மதுரா ஷட்ரஸோபேதா ஸர்வஸம்பத்கரீ தரா ।
ப்ரதக்ஷிணோதகவதீ வர்ணகந்தரஸை: சுபா ॥

வெண்மை, சிகப்பு, மஞ்சள், கருமை, புறாவின் நிறம் உள்ளதும், கசப்பு, உறைப்பு, துவர்ப்பு, உவர்ப்பு, புளிப்பு, இனிப்பு ஆகிய அறுவகைச் சுவையுள்ளதுமான பூமி ஸகல ஸம்பத்துக்களையும் தரவல்லதாகும். பிரதக்ஷிணமான ஜலமுள்ளதும், நிறம், மணம், சுவையுள்ளதுமான பூமி சுபகரமாகும்.

पुरुषाञ्जलिमात्रे तु दृष्टतोया मनोरमा ।
निष्कपाला निरुपला कृमिवल्मीक वर्जिता ।।

புருஷாஞ்ஜலிமாத்ரே து த்ருஷ்டதோயா மனோரமா ।
நிஷ்கபாலா நிருபலா க்ருமிவல்மீக வர்ஜிதா ॥

மனிதனுடைய கையெடுப்பு, மட்டத்தில் தண்ணீர் காணப்படுகிற பூமி இன்பத்தை அளிப்பதாகும். மேலும் மண்டை ஓடுகள் இல்லாததும், சிறியதும் பெரியதுமான

பாறாங்கற்கள் இல்லாததும், புழுக்கள், புற்றுகள் இல்லாததுமான பூமி உத்தமமாகும்.

अस्थिवर्ज्या नसुषिरा तनुवालुकसंयुता ।
अङ्गारैर्वृक्षमूलैश्च शूलैश्चापि पृथग्विधैः ।
पङ्कसङ्करकूपैश्च दारुभिर्लोष्टकैरपि ।।

शर्कराभिरयुक्ता या भस्माद्यैस्तु तुषैरपि ।
सा शुभा सर्ववर्णानां सर्वसम्पत्करी धरा ।।

அஸ்த்திவர்ஜ்யா நஸுஷிரா தனுவாலுகஸம்யுதா ।
அங்காரைர்வ்ருக்ஷமூலைஸ்ச்ச சூலைஸ்ச்சாபி ப்ருதக்விதை:।
பங்கஸங்கரகூபைஸ்ச்ச தாருபிர்லோஷ்டகைரபி ।

சர்க்கராபிர் அயுக்தா யா பஸ்மாத்யைஸ்து துஷைரபி ।
ஸா சுபா ஸர்வவர்ணானாம் ஸர்வஸம்பத்கரீ தரா ॥

எலும்புகள் இல்லாததும், சிறுசிறு பொந்துகள் இல்லாததும், சன்னமான சிறிய மணல்களுடன் கூடியதும் எரிந்தும் எரியாததுமான கொள்ளிக்கட்டைகள், மரங்களின் வேர்கள், பற்பலவிதமான சூலங்கள், சூலத்தைப்போல் கூர்மையான முளைகள் சேறுடன்கூடிய பாழுங்கிணறுகள், மரக்கட்டைகள், ஓட்டுச்சல்லிகள் (கற்கள்) பெருமணல் சலங்கை மணல் கூழாங்கற்கள் சாம்பல், பதறு ஆகியவை இல்லாததுமான பூமியானது எல்லோருக்கும் எல்லாவிதமான செல்வங்களை அளிக்கக்கூடியதாகும்.

दध्याज्यमधुगन्धा च तैलासृक्गन्धिका च या ।
शवमीन पक्षिगन्धा च सा धरा निन्दिता वरैः ।।

தத்யாஜ்ய மதுகந்தா ச தைலாஸ்ருக் கந்திகா ச யா ।
சவமீனபக்ஷிகந்தா ச ஸா தரா நிந்திதா வரை:॥

தயிர், நெய், மது இவற்றின் வாடையுள்ளதும்; எண்ணெய், ரத்தம் ஆகியவற்றின் வாடையுள்ளதும், பிணம், மீன், பறவைகள் ஆகியவற்றின் நாற்றமுள்ளதுமான பூமி, கட்டிடங்கள் கட்டுவதற்கு உகந்ததல்ல என்று வாஸ்து சாஸ்திரம் அறிந்த வல்லுநர்களின் கருத்தாகும். மேலும்,

सभाचैत्यसमीपस्था नृपमन्दिर संश्रिता ।
देवालयसमीपस्था कण्टकद्रुम संयुता ।।

वृत्तत्रिकोणविषमा वज्राभा कच्छपोन्नता ।
. . . . . . . . . . . . . . . . . . . . . . ।।

एकद्वित्रिचतुर्मार्गान्तरिताऽव्यक्तमार्गगा ।
निम्नं यत्प्रणवाकारं पक्षीव मुरजोन्नतम् ।।

मत्स्याभं च चतुष्कोणं महावृक्षसमायुतम् ।
चैत्यवृक्षयुतं साल चतुष्कोणसमाश्रितम् ।।

भुजङ्गनिलयं चैव शङ्करारामेव च ।
श्मशानं चाश्रमस्थानं कपिसूकरकन्निभम् ।
अन्यदेवंविधं व(वा)स्तु निन्दितं वस्तु पाठकैः ।।

ஸபாசைத்யஸமீபஸ்தா ந்ருபமந்திர ஸம்ச்ரிதா ।
தேவாலயஸமீபஸ்தா கண்டகத்ரும ஸம்யுதா ॥

வ்ருத்தத்ரிகோணவிஷமா வஜ்ராபா கச்சபோந்நதா ।
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . ॥

ஏகத்வித்ரிசதுர்மார்காந்தரிதாऽவ்யக்தமார்ககா ।
நிம்னம் யத்ப்ரணவாகாரம் பக்ஷீவ முரஜோந்நதம் ॥

மத்ஸ்யாபம் ச சதுஷ்கோணம் மஹாவ்ருக்ஷஸமாயுதம் ।
சைத்யவ்ருக்ஷயுதம் ஸால சதுஷ்கோணஸமாச்ரிதம் ॥

புஜங்கநிலயம் சைவ சங்கராராமமேவ ச ।
ச்மசானம் சாச்ரமஸ்தாநம் கபிஸூகரகந்நிபம் ।
அந்யதேவம்விதம் வ(வா)ஸ்து நிந்திதம் வஸ்து பாடகை: ॥

சபாமண்டபத்திற்கும், துறவிகள் மடாலயத்திற்கும் அருகில் உள்ளதும், அரசர் மாளிகையை ஒட்டி இருப்பதும், தேவாலயத்தின் அருகில் இருப்பதும், முள்மாங்கள் உள்ளதும், வட்டமாகவும், முக்கோண வடிவமாகவும், கோணலாகவும் (ஒழுங்கற்றதாகவும்) ஆமையைப்போல் உள்ளதும், தெருக்குத்தல் உள்ளதாகவும், தெளிவில்லாத பாதையை உடையதாகவும். பள்ளமாக இருப்பதும், பிரணவத்தின் வடிவமாக இருப்பதும், பறவையின் வடிவம்போல் இருப்பதும், பேரிகை வாத்தியம்போல் உள்ளதும், நாற்கோண வடிவமாக இருப்பதும், தேக்கு அல்லது ஆலமரத்துடன் கூடியதும், பாம்புகளுக்கு இருப்பிடமானதும், சிவாலயத்திற்குரிய பூந்தோட்டமாகவுள்ளதும், சுடுகாடு அல்லது இடுகாடாக உள்ளதும், துறவு மேற்கொள்ளவிருப்பவர் வசிக்கும் ஆசிரம ஸ்தானமாக இருப்பதும், குரங்கு, பன்றி போன்ற வடிவம் உள்ளதும், காட்டு (மலை)பாம்புபோன்ற வடிவம் உள்ளதும், கோடரி, முறம், உரல், சங்கு, பூனை, ஓணான் போன்ற வடிவம் உள்ளதும், உவர்மிக்க (உப்படித்த) பூமியாக இருப்பதும், பற்பல விஷ கிருமிகள் உறையுமிடமாக இருப்பதும், பலவழிப் பாதைகளிடையே உள்ளதும், பாதைக்குத் தடையாக உள்ளதுமான பூமி கட்டிடங்கள், வீடுகள் முதலானவைகள் அமைக்க ஏற்றதல்ல.

**ஒரு மனை (ஸ்தலம்) ஜீவன் உள்ளதா என்பதைக்காண**

व्यामविस्तारयोरैक्यं ग्रामाक्षरसमन्वितम् ।
चतुर्गुणं नामयुक्तं शिवनेत्रैश्च भाजितम् ॥

एकेन जीविताभूमिः द्वाभ्यां च समता भवेत् ।
शून्यशेषे च शून्यं स्यात् . . . . . . . . . ॥

வ்யாம விஸ்தாரயோரைக்யம் க்ராமக்ஷர ஸமன்விதம் ।
சதுர்குணம் நாமயுக்தம் சிவநேத்ரைஸ்ச்ச பாஜிதம் ॥
ஏகேன ஜீவிதாபூமி: த்வாப்யாம் ச ஸமதா பவேத் ।
சூன்ய சேஷே ச சூன்யம் ஸயாத் . . . . . . . . . ॥

ஒரு மனையின் நீள-அகலத்தைக் கூட்டி, கிராமத்தின் அல்லது நகரத்தின் பெயரால் உள்ள முதல் எழுத்து எண்ணையும் கூட்டி, அதனை நான்கால் பெருக்கி, மனையின் சொந்தக்காரர் பெயரில் உள்ள எழுத்துக்களையும் கூட்டி, சிவ நேத்ரம் = மூன்றினால் (சிவபெருமானின் கண்கள் மூன்று என்பதால் சிவநேத்ரம் என்ற சொல் மூன்றைக் குறிக்கும்) வகுத்து வரும் மீதி ஒன்றானால் அந்த மனை ஜீவனுள்ளது, மீதம் இரண்டானால் நடுத்தரமானது, மீதம் சூன்யம் (0 எனில்) அந்த மனை பயனற்றது என்று காண்கவும்.

உதாரணமாக, தஞ்சையில் ராஜகோபால் என்பவருக்குச் சொந்தமான ஒரு ஸ்தலத்தின் நீளம் 60 அடி, அகலம் 42 அடி என்று வைத்துக்கொண்டால் கூடுதல் 102 அடி ஆகும். அதனுடன் கிராமத்தின் அல்லது நகரத்தின் பெயரில் உள்ள முதல் எழுத்திற்கான எண்ணாவது; தேவநாகரி எழுத்துக்கள் (1) அ வர்க்கம், (2) க வர்க்கம், (3) ச வர்க்கம், (4) ட வர்க்கம், (5) த வர்க்கம், (6) பவர்க்கம், (7) யவர்க்கம், (8) ச வர்க்கம் என்று எட்டு வர்க்கமாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இந்த வரிசைப்படி த எழுத்து 5-ஆவது வரிசையில் உள்ளது. இதனை மேற்படி 102 உடன் கூட்ட 107 ஆகும். அதை நான்கினால் பெருக்கினால் 428 ஆகும். சொந்தக்காரர் ராஜகோபால் (राजकोपाल) என்பதில் ஐந்து எழுத்துக்கள் உண்டு. அந்த எண்ணையும் கூட்டினால் 434 ஆகும். இதனை மூன்றினால் வகுத்தால் (144-1) மீதம் ஒன்று வருகிறது. ஆகையால் ராஜகோலாபால் என்வருக்குச் சொந்தமான தஞ்சையில் உள்ள 60' x 42' நீள - அகலமுள்ள மனை ஜீவனுள்ளது; உயிரோட்டம் உள்ளது என்று அறியலாகிறது.

இதுபோல் தஞ்சையில் கணேசன் என்பவருக்குச் சொந்தமான 52 அடி நீளம், 35 அடி அகலம் உள்ள

மனையின் நீளத்தையும், அகலத்தையும் கூட்டினால் 87 ஆகும். தஞ்சாவூர் பெயரில் உள்ள முதல் எழுத்து ஐந்தாவது வரிசையில் உள்ளது.

87 + 5 = 92

92 x 4 = 368

கணேச (गणेश) 368+3=371

371/3 = 123 - 2.

மீதம் இரண்டு வருவதால் கணேசன் என்பவருக்குச் சொந்தமான தஞ்சையில் உள்ள 52' x 35' மனை நடுத்தரமானது என்று அறியலாகும்.

**மனையின் திசை அறிய :-**

வாஸ்து அமைப்பதற்காகத் தேர்வு செய்யப்பட்ட இடத்தின் சரியான கிழக்கு-மேற்கு திசை அறிந்தாக வேண்டியது மிகவும் அவசியமாகும். விஞ்ஞானம் வளர்ந்துள்ள இந்நாட்களில் திசைமானி கொண்டு திசை தீர்மானிக்கிறார்கள். நகரங்களின் வெளிப்புறத்தில் அமைந்துள்ள மனைகள் தனித்தனியாகவும் அமைந்ததாக இருக்கும். மனையின் திசையைச் சரியாக உறுதி செய்து



கொள்ளாமல் தோராயமாக கிழக்கு-மேற்கு என்று எண்ணி அதற்கேற்ப கட்டிடத்தை அமைக்கவும், அதன் பிறபகுதி களையும் அமைக்கவும் நேரிட்டால் வீடு சுபகரமாக அமையாமல் போகக்கூடும். எதிர்பார்க்கும் நன்மைகள்-நற்பயன்கள் அமையாது போகலாம். ஆதலின் ஒரு ஸ்தபதியோ, கட்டிடக்கலைஞரோ தமது முதற்பணியாக மனையின் சரியான திசைகளை அறிந்த பிறகுதான், ஸ்தலத்தின் மேடான பகுதி எது? தாழ்வான பகுதி எது? வாசல் பகுதியை எங்கு அமைப்பது? கட்டிடத்தின் பிற பகுதிகளை எங்கெங்கு எப்படி அமைப்பது? என்று அறிந்து திட்டமிடமுடியும்.

இந்நாட்களில் ரியல் எஸ்டேட் என்ற பெயரில் மனைகளை விற்பனை செய்யும் விவரமறிந்தோர், மனைகளின் சரியான திசைகளை அறிந்தே மனைகளை வகுத்திருக்கலாம் என்றாலும், ஒரு குறிப்பிட்ட மனையின் சரியான திசைகளைக் கண்டறிந்து கொள்ளவேண்டியது அந்த மனையில் வீடு, கட்டிடம் அமைப்பவர்களுடைய கடமை யாகும். ஒருசில நேரத்தில் அல்லது இடத்தில் கிழக்கு திசை என்று எண்ணி மனையில் வீடு அமைத்தால் அது வடகிழக்கு, தென்கிழக்கு, வாயுமூலை, நிர்ருதி மூலையை நோக்கியதாக அமைத்துவிடலாம். கடன் வாங்கி செலவு செய்து வேலை முடிந்தபிறகு விளைவும் எதிர்பார்த்தமைக்கு மாறாக அமையலாம் என்பதால் ஒவ்வொரு மனையுடன் திசைகளை அறிந்துகொள்ளவேண்டியது இன்றியமையாதது.

மனையின் திசைகளை அறியப் பெரும்பாலான நூல்களிலும் பின்வரும் முறையே மேற்கொள்ளப்படக் கூடியதாகக் கூறப்பட்டுள்ளது.

**சங்கு ஸ்தாபனம்** (Installing of SANKU)

சாதாரணமாக **சங்கு** (SANKU) என்ற சொல்லுக்கு முளைக்குச்சி என்று பொருளாகும். மனையில் **சங்கு** ஸ்தாபனம்பற்றிக் கூறப்படுமிடத்தில் சங்குவின் பொருள் சற்று வித்தியாசப்படுகிறது.

மனையின் நாற்திசைகளை அறிவதற்கு அவசியமான **சங்கு** நல்ல அழுத்தமான சந்தனமரம், கருங்காலி, தேக்கு போன்ற மரத்தில் தயார் செய்யப்பட்டதாக இருத்தல்வேண்டும். சங்கு, யானை தந்தத்தில் அமைந்திருப்பின் உத்தமமாகும். சங்கு வழவழப்புடன் உருண்டையாக அடிமுதல் நுனிவரை சீராகச் சிறுத்து இருத்தல்வேண்டும்.

मानज्ञानविहीनैस्तु कर्म कर्तुं न शक्यते

(மானஞானவிஹீநைஸ்து கர்ம கர்தும் ந சக்யதே) என்ற விச்வகர்ம வாஸ்து சாஸ்திர வசனப்படி அளவு பற்றிய

அறிவின்றி செயல்படமுடியாது என்பதால் இதன் தொடர்பாக அளவுமுறைகள்பற்றி நூல்களில் கூறப்பட்டிருப்பதாவது (இந்நாட்களில் நீட்டல் அளவு சென்டிமீட்டர்-மீட்டர் என்று நடைமுறையில் இருந்துவருகிறது. பண்டைய நீட்டல் அளவுப்படியே வாஸ்து சாஸ்திர விதிமுறைகள் அமைந்துள்ள படியால் வாஸ்து சாஸ்திர நூல்களில் கூறப்பட்டவாறு நீட்டல் அளவுமுறை இங்கு தரப்படுகிறது. (அதனைத் தற்காலமுறைக்கு மாற்றிக்கொள்வது கடினமல்ல)

"வாஸ்து வித்யை" எனும் நூலில் கூறப்பட்டுள்ளதாவது, எதைவிடச் சிறிய பரிமணம் (அளவு) இல்லையோ அதைப் பரமாணு என்று சொல்வர். தூசிகள் எங்கிலுமே பரவி இருந்தாலும் ஜன்னல் அல்லது கூரைகளில் இடைவெளி வழியாகச் சூரிய ஒளி பரவும் இடத்தில் (அவ்வொளியிடத்தில்) மட்டும் புறக்கண்களால் காணப்படும் ஒரு தூசியில் ஆறுல் ஒரு பகுதியே பரமாணு என்று சொல்லப்படுகிறது.

जालसूर्य मरीचिस्थं यत्सूक्ष्मं दृश्यते रजः ।
तस्य षष्ठस्तु यो भागः परमाणुरितीर्यते ।।

ஜாலஸூர்ய மரீசிஸ்த்தம் யத்ஸூக்ஷமம் த்ருச்யதே ரஜ: ।
தஸ்ய ஷஷ்ட்டஸ்து யோ பாக:பரமாணுரிதீர்யதே ॥

பரமாணு முதல் விரிவடைந்துதான் அங்குல அளவு என்பது. பரமாணு சாதாரண மனிதர்களின் புறக்கண்களுக்குத் தெரிவதில்லை. யோகியருக்குமட்டில் புலனாகக்க கூடியதாகும்.

परमाणुक्रमाद् वृद्धं मानाङ्गुलमिति स्मृतम् ।
परमाणुरिति प्रोक्तं योगिनां दृष्टिगोचरम् ।।

मयमतम् v chap.

பரமாணுக்ரமாத் வ்ருத்தம் மானாங்குலமிதி ஸ்மிருதம் ।
பரமாணுரிதி ப்ரோக்தம் யோகினாம் த்ருஷ்டிகோசரம் ॥

மயமதம் v cha.

பரமாணு 8 கொண்டது த்ரஸரேணு எனப்படும்.

(இதுவே மயமதத்தில் ரதரேணு எனப்படுகிறது. தேரின் சக்ரதத்தினின்றும் விழும் தூசி.)

த்ரஸ (ரத)ரேண 8 கொண்டது ரோமாக்ரம் (உரோமத்தின் நுணி)

ரோமாக்ரம் 8 கொண்டது ஒரு லிக்ஷா எனப்படும்.

லிக்ஷா 8 கொண்டது ஒரு யூகம் (பேன் முட்டை)

யூகம் 8 கொண்டது ஒரு யவம்

யவம் 8 கொண்டது ஒரு அங்குலம் or மாத்ரம்

அங்குலம் 12 கொண்டது ஒரு விதஸ்தி or ஒரு சாண்

விதஸ்தி 2 கொண்டது ஒரு முழம் or கிஷ்கு

25 அங்குலம் ப்ராஜாபத்யம்

26 அங்குலம் தனுர்முஷ்டி

27 அங்குலம் தனுர்க்ரஹம்

28 அங்குலம் ப்ராச்யம்

29 அங்குலம் வைதேஹம்

30 அங்குலம் வைபுல்யம்

31 அங்குலம் ப்ரகீர்ணகம்

परमाणुभिरष्टाभिः त्रसरेणुरिति स्मृतः ।
त्रसरेणुश्च रोमाग्रं लिक्षा यूका यवास्तथा ।।

क्रमशोऽष्टगुणाः प्रोक्ताः यवोऽष्टगुणितोऽङ्गुलिः(लः) ।
अङ्गुलं तु भवेन्मात्रं वितस्तिर्द्वादशाङ्गुलः ।।

तद्द्वयं हस्त उद्दिष्टः स च किष्कुरिति स्मृतः ।
पञ्चविंशतिमात्रास्तु प्राजापत्य इति स्मृतः ।।

षड्विंशतिर्धनुमुष्टिः सप्तविंशत् धनुग्रहः ।
अष्टाविशाङ्गुलः प्राच्यो वैदेहो नवविंशतिः ।।

वैपुल्यस्त्रिंशदङ्गुल्यः एकत्रिंशत्प्रकीर्णकः ।
पाने च शयने किष्कुः . . . . . . . . . . . ।।

वास्तूनां च धनुर्मुष्टिः . . . . . . . . . . . ।
सर्वेषामपि वास्तूवनां किष्कुरेवाथवामतः ।।

பரமாணுபிரஷ்டாபி: த்ரஸரேணுரிதி ஸ்ம்ருத:।
த்ரஸரேணுஸ்ச்ச ரோமாக்ரம் லிக்ஷா யூகா யவாஸ்ததா ॥

க்ரமசோ஽ஷ்டகுணா: ப்ரோக்தா: யவோ஽ஷ்டகுணிதோ஽ங்குலி:।
அங்குலம் து பவேந்மாத்ரம் விதஸ்திர்த்வாதசாங்குல:॥

தத்த்வயம் ஹஸ்த உத்திஷ்ட: ஸ ச கிஷ்குரிதி ஸ்ம்ருத:।
பஞ்சவிம்சதிமாத்ராஸ்து ப்ராஜாபத்ய இதி ஸ்ம்ருத:॥

ஷட்விம்சதிர்தநுமுஷ்டி: ஸப்தவிம்சத் தநுக்ரஹ:।
அஷ்டாவிம்சங்குல: ப்ராச்யோ வைதேஹோ நவவிம்சதி:।।

வைபுல்யஸ்த்ரிம் சதங்குல்ய: ஏகத்ரிம்சத்ப்ரகீர்ணக:॥
பாக்நே ச சயநே கிஷ்கு: . . . . . . . . . . . ॥

வாஸ்தூநாம் ச தநுர்முஷ்டி: . . . . . . . . . . . . . ।
ஸர்வேஷாமபி வாஸ்தூவநாம் கிஷ்குரேவாதவாமத:॥

படுக்கை, கட்டில் விஷயத்தில் 'கிஷ்கு' எனும் அளவும் எல்லாவித வாஸ்து அளவு விஷயத்திலும்கூட கிஷ்கு எனும் அளவே பயன்படுத்தலாம் (Vasthu Vidya. Ch. - 1)

**விச்வகர்மா வாஸ்து சாஸ்திரத்தில் கூறப்படுவதாவது :**

பரமாணு என்பது இவ்வுலக நடைமுறைச் செயற்பாட்டுக்குப் பயன்படாது என்பதால் அதனை அளவு கோலாகக் கொள்ளலாகாது. நடைமுறையில் பயன்படும் பொருள்கொண்டு அளவுமுறை காண்பதே சரி என்பதால் சம்பா நெல், கோதுமை ஆகியவை உலகில் பயன்படுத்திப்படும் பொருள்கள் என்பதால்

| | |
|---|---|
| 3 நெல்மணிகளின் நீளம் | ஒரு அங்குலம் எனப்படும். |
| 12 அங்குல நீளம் | ஒரு விதஸ்தி எனப்படும் |
| 2 விதஸ்திகள் (24 அங்குலம்) | ஒரு கையளவு (முழம்) |
| இரண்டு கை (முழம்) | ஒரு தனுர் முஷ்டி |
| 2 தனுர் முஷ்டி | ஒரு தண்டம் (அதாவது 4 முழம் அல்லது 8 அடி) |

இனி, சங்கு ஸ்தாபனத்தைத் தொடருவோம்.

சங்குவின் நீளம் 24 அங்குலம் உத்தமம்
சங்குவின் நீளம் 20 அங்குலம் நல்லது
சங்குவின் நீளம் 16 அங்குலம் நடுத்தரம்
சங்குவின் நீளம் 12 அங்குலம் அதமம்

சங்கு ஸ்தாபனம்பற்றி **மயமதம்** கூறப்பட்டுள்ள கருத்தாவது நீட்டல் அளவுபற்றி அதிகம் வேறுபாடு இல்லைதான். 8 தண்டம் கொண்டது ரஜ்ஜு என்று பெயர். வீடு முதலான விஷயத்தில் 'ஹஸ்தம்' கை அளவு 'முழம்' என்ற அளவையும் படுக்கை, கட்டில் போன்றவை விஷயத்தில் விதஸ்தி 'சாண்' அளவிலும் சிறியதாக உள்ளவற்றை அங்குலத்தாலும் மிகச் சிறியவை. விஷயத்தில் - 'யவ' (யவை தான்யம் - கோதுமை போன்றது) அளவிலும் அளக்கவேண்டியது.

குறிப்பு: சங்கு ஸ்தாபனம் என்பது மத சம்பந்தமானதல்ல என்றாலும், நல்ல நாளில் இரவு-சந்தியா நேரம் தவிர நல்ல நேரத்தில் அந்த ஸ்தலத்தில் கணபதி, துர்கை இருவரையும் பூஜைசெய்த பிறகு மேளதாளத்துடன் நடத்தவேண்டியது என்றும், அதற்கும் அடிக்கல் நாட்டுவதற்கும் சம்பந்தமில்லை என்றும் அறியவும்.

விச்வகர்ம வாஸ்து சாஸ்திரத்திலும் 12 அங்குலம் சங்குவே உயர்ந்ததெனக் கூறப்பட்டுள்ளது. இது ஜனங்கள்

---

समतल इह शस्तः शङ्कुरर्काङ्गुलोच्चः என்று வாஸ்து வித்யை நூலில் கூறப்பட்டுள்ளது. அதாவது 12 அங்குலம் சங்குவின் அளவு எனக்கூறப்பட்டுள்ளது.

அமைக்கும் வீடு விஷயத்தில் மட்டும் என்றும், ஆலய நிர்மாண விஷயத்தில் இரண்டு முழம் சங்கு பயன்படுத்தப்பட வேண்டும் என்றும் மேற்படி நூலின் உரை நூலில் கூறப்பட்டு உள்ளது.







**சங்கு SANKU शङ्कुः**

शङ्कुः श्रेयस्करः प्रोक्तः द्वादशाङ्गुलमानभाक् । तादृश शङ्कोः दैर्घ्यं तावत् द्वादशाङ्गुलप्रमाणम् । अथवा एक हस्त-प्रमाणम् । लक्ष्मणमिदं मानुषभवननिर्माणाय प्रोक्तमिति भावः । देवालयादिषु तावत् शङ्कुः द्विहस्तप्रमाणकः कार्यः ।

(Viswakarma V. Sastri. Page. 15)

**மயமதம் நூலில் கூறப்படுவதாவது,**

சங்குவின் உயரமானது ஒரு முழமாகும் (24 அங்குலம்). அதன் உச்சியின் குறுக்களவு (நுனியானது) ஒரு அங்குலமாகும். அதன் மூலத்தின் குறுக்களவானது 5 அங்குலமாகும். அது வட்டமாகவும் வடு இல்லாமலும் ('பொக்கை', 'போரை' இல்லாமலும்) இருப்பது நல்லதாகும்.

மயமதமே இன்னொரு இடத்தில் சங்கு 11 அங்குலம் முதல் 21 அங்குலம் வரையில் இருக்கவேண்டும் என்றும், அடிப்பகுதி ஒரு கைப்பிடி அளவுள்ளதாகவும், நுனி ஊசியைப்போல் இருக்கவேண்டும் என்றும் கூறுகிறது. (மயமதம் அத்யாயம் 6 - 11)

मूलं पञ्चाङ्गुलं व्यासं सुवृत्तं निर्व्रणं वरम् ।
अष्टादशाङ्गुलं मध्यं कन्यसं द्वादशाङ्गुलम् ।।

आयाम सदृशं नाहं मूलान्त्यं तु नवाङ्गुलम् ।
दन्तं वै चन्दनं चैव खदिरः कदरः शमी ।।
शाकश्च तिन्दुकश्चैव शङ्कुवृक्षा उदीरिताः ।।

18 அங்குலம் உயரமுள்ளது சங்கு மத்யமம் (Medium). 12 அங்குலம் உயரமுள்ளது அதமமாகும். அதன் அடிப் பகுதியானது உயரத்திற்குத் தக்க பருமன் உள்ளதாக இருக்க வேண்டும். 9 அங்குலம் உள்ளது அதமாதமமாகும். (மயமதம் பெரும்பான்மையாக ஆலய நிர்மாணத்தை அடிப்படையாகக் கொண்டதாக இருப்பதால் ஆலய விஷயத்தில் 24 அங்குல சங்கு உத்தமம் என்றும், 18 அங்கு சங்கு மத்யமம் என்றும், 12 அங்குல சங்கு அதமம் என்று கூறுவதாகவே கருதவேண்டும். வீடு அமைக்கும் விஷயத்திலும் இந்த அளவை முறையை அப்படியே ஏற்கத் தேவையில்லை என்பது (விச்வகர்ம வாஸ்து சாஸ்திரத்தின் உரையில் கூறப்பட்டவாறு) நம் கருத்து.

अन्यैः सारद्रुमैः प्रोक्तं तस्याग्रं चित्रवृत्तकम् ।

(அந்யை: ஸாரத்ருமை: ப்ரோக்த்தம் தஸ்யாக்ரம் சித்ரவ்ருத்தகம்) சங்கு அமைப்புக்கெனக் கூறப்பட்ட மரத்தில் வைரம் பாய்ந்த பகுதிகொண்டு சங்குவைச் செய்துவிட்டு வேறு நல்ல அழுத்தமான மரத்தால் ஒரு அங்குல உயரத்திற்குக் குடைபோல் செய்து சங்குவுடன் இணைக்க வேண்டும். (மயமதம் - அத். 6)

வாஸ்து வித்யைபற்றி **காச்யப சில்ப சாஸ்திரம்** கூறுகையில் அதன் 6ஆவது படலத்தில் (மகால் வெளியீடு)

शङ्कुः कलाङ्गुलायामम् . . . . . . . . . . ।

சங்கு 16 அங்குலம் (கலா - சந்திரனுக்கு 16 கலைகள் என்பதால் கலா என்ற சொல் 16 என்பதைக் குறிப்பிடுகிறது).

சங்கு 16 அங்குலம் நீளமுள்ளதாக இருக்கவேண்டும். அதன் சுற்றளவு அதற்கு (அதன் பருமனுக்கு ஏற்ற மாதிரி இருக்க வேண்டும். அதன் நுனிப்பகுதியின் (விசால) விஸ்தாரத்தின் 3-ல் ஒருபகுதி நுனிப்பகுதியின் விஸ்தாரம் இருக்கவேண்டும் மயமதம் இந்த இடத்தில் சங்குவின் அடிப்பகுதியானது ஒரு முஷ்டி (பிடியளவு) கனமுள்ளதாகவும், நுனியானது ஊசியைப் போலவும் இருக்கவேண்டும் என்று கூறுகிறது.

पूर्णमुष्टिस्तु नाहं स्यात् मूलं सूची निभं भवेत् ।

(பூர்ணமுஷ்டிஸ்து நாஹம் ஸ்யாத் மூலம் ஸூசிநிபம் பவேத் – மயமதம். அத். 6-17)

இவ்வாறு சங்குவைத் தயார்செய்து, தனதாகச் செய்து கொள்ளப்பட்ட தமக்குச் சொந்தமான பூமியில் உத்தராயண மாதங்களில் தை மாதம் முடிய் ஆனி மாதம் முடியவுள்ள மாதங்களில் நல்ல நக்ஷத்திரம் நல்லயோகம் உள்ள நன்னாளில் (செவ்வாய், சனி தவிர்த்த நாளில்) காலை நேரத்தில் கிழக்கு அல்லது வடக்கு முகமாக இருந்து ஸ்தாபிக்கவேண்டும்.

சங்குவை ஸ்தாபனம் செய்வதற்கு முன்பாக அந்த பூமியின் நடுவில் சங்குவின் அளவைப்போல் இரண்டு பங்கு விஸ்தாரம் உள்ள ஒரு வட்டத்தை அமைக்கவேண்டும். சங்குவை ஒரு ஸ்தபதியோ (ஆலயமாயின்) அல்லது கட்டிடக் கலைஞரோ கிழக்குமுகமாகவோ, வடக்கு முகமாகவோ உட்கார்ந்து கொண்டு, சங்குவின் நுனியை வட்டத்தின் நடுவில் சங்குவை இடதுகையினால் பிடித்துக்கொண்டு, மனையின் சொந்தக்காரருடைய அனுமதிபெற்று அந்த சங்குவை எட்டுமுறை சுத்தியால் அடிக்கவேண்டும்.

गृहीत्वा वामहस्तेन प्राङ्मुखो वाऽप्युदङ्मुखः ।
दक्षिणेनाष्टलं गृह्य ताडयेदष्टभिः क्रमात् ।।

க்ருஹீத்வா வாமஹஸ்தேன ப்ராங்குகோ வாஸப்யுதங்முக :।
தக்ஷிணேநாஷ்டலம் க்ருஹ்ய தாடயேதஷ்டபி: க்ரமாத் ॥

விச்வகர்ம வாஸ்து சாஸ்திரத்தில் 3வது அத்யாயத்தில் சூரியனுடைய நிழலைத் துல்யமாக அறிவதற்காக சங்குவின் தலைப்பகுதியில் ஒரு மெல்லிய ஆணியை அமைக்கவேண்டியது அவசியம் என்று கருதும் வகையில் ச்லோகங்கள் அமைந்துள்ளன. உரை நூலும் இதனை உணர்த்துகிறது. சங்குவின் தலைப்பகுதியில் உள்ள ஆணி அல்லது உறுதியுள்ள ஊசி (சங்குவின்)சிகை எனப்படுகிறது. மேலும், சங்குவை வருடத்தின் இஷ்டப்பட்ட எந்த மாதத்திலும் ஸ்தாபிக்கலாம் என்றும், காலையிலோ மாலையிலோ ஸ்தாபிக்கலாம் எனவும் உறை நூலிலிருந்து அறியலாகிறது.

ஊன்றப்பட்ட சங்குவின் சிகை (அணியின்) நிழல் வட்டத்தில் எந்த இடத்தில் விழுகிறதோ அது **பிந்து** ஸ்தானம் எனப்படும் .காலையிலும் மாலையிலும் சங்குவின் தலைநிழல் வில்லின் வடிவம் போன்று தோற்றம் அளிக்கும் இடங்களில் விழுவதாக இருக்கும். அந்த நிழல் சங்குவின் நடு ரேகைக்கு இடதுபக்கமாகவோ அல்லது வலது பக்கமாகவோ விழுவதாக இருக்கும்.

உத்தராயணத்தில் (தை மாதம்முதல் ஆனி மாதம்முடிய) சங்கு ஸ்தாபனம் செய்யப்பட்டால் சங்குவின் நிழல் மண்டலத்தின் வட்டத்தின் மையப்பகுதிக்கு தெற்குப்புறமாக நிழல் விழும். தக்ஷிணாயணத்தில் (ஆடி மாதம் முதல் மார்கழி முடியவுள்ள மாதங்களில்) சங்கு ஸ்தாபனம் நடைபெற்றால் சங்குவின் நிழல் வட்டத்தின் மையப்பகுதிக்கு வடக்குப் பக்கமாக நிழல் விழும். புரட்டாசி மாதத்தில் சங்கு ஸ்தாபனம் நிகழுமாயின் சங்குவின் நிழல் பக்கவாட்டில் விழாது. இதே போன்று வைகாசி மாதத்தில் சங்கு ஸ்தாபனம் நடந்தாலும் சங்குவின் நிழல் பக்கவாட்டில் விழுவதில்லை. வட்டத்தில் ஸ்வஸ்திகம் போன்ற ரேகை அமைக்கப்பெற்றால் சங்குவின் நிழல் மையத்தில் ஸ்வஸ்திக ரேகையுடன் இணைந்ததாக இருக்கும்.

कन्यायां वृषभे मासि यदिव्यक्ते दिवाकरे ।
शङ्कुच्छाया मध्यगा स्यात् न हि पार्श्वे कदाचन ।।

கந்யாயாம் வ்ருஷபே மாஸி யதிவ்யக்தே திவாகரே ।
சங்குச்சாயா மத்யகா ஸ்யாத் ந ஹி பார்ச்வே கதாசன ॥

சித்திரை மாதத்திலும், ஆவணி மாதத்திலும் சங்குவின் நிழல் நான்கு அங்குல அளவினதாகவும், தை மாதத்தில 8 அங்குல அளவு நிழலும். ஆனி மாதத்தில் மூன்று அங்குல அளவினதாகவும். ஆடி மாதத்தில் நான்கு அங்குல அளவினதாகவும், ஐப்பசி மாதத்தில் இரண்டங்குல அளவினதாகவும், கார்த்திகை மாதத்தில் நான்கு அங்குல அளவினதாகவும், மார்கழி மாதத்தில் 6 அங்குல அளவினதாகவும். மாசி மாதத்தில் 6 அங்குல அளவினதாகவும் இருக்கும்.






मेषस्थे वा मृगस्थे वा रवौ तु चतुरङ्गुला ।
शङ्कुच्छाया भवेद्व्यक्ता दिशां निर्णयकारिणी ।।

मकरस्थे रवौ शङ्कोश्छायाष्टङ्गुलका भवेत् ।
मिथुनस्थे रवौ शङ्कोश्छाया तु त्र्यङ्गुला भवेत् ।

कुलीरस्थे रवौ शङ्कोश्छाया वेदाङ्गुला भवेत् ।।
तुलास्थिते रवौ शङ्कोश्छाया स्याच्चतुरङ्गुला ।

वृश्चिकस्थे रवौ शङ्कोश्छाया स्याच्चतुरङ्गुला ।।
चापस्थिते रवौ शङ्कोश्छाया स्याच्च षडङ्गुला ।

मीनस्थिते रवौ शङ्कोश्छाया स्याच्चतुरङ्गुला ।
उत्तरायणमासेषु छाया दक्षिणगा भवेत् ।
दक्षिणायनमासेषु छाया चोत्तरगा भवेत् ॥ वि. वा. शा.

மேஷஸ்தே வா ம்ருகஸ்தே வா ரவௌ து சதுரங்குலா ।
சங்குச்சாயா பவேத்வ்யக்தா திசாம் நிர்ணயகாரிணீ ॥

மகரஸ்தே ரவௌ சங்கோச்சாயாஷ்டாங்குலகா பவேத் ।
மிதுநஸ்தே ரவௌ சங்கோச்சாயா து த்ர்யங்குலா பவேத் ।
குலீரஸ்தே ரவௌ சங்கோச்சாயா வேதாங்குலா பவேத் ॥
துலாஸ்திதே ரவௌ சங்கோச்சாயா ஸ்யாச்சதுரங்குலா ।

வ்ருச்சிகஸ்தே ரவௌ சங்கோச்சாயா ஸ்யாச்சதுரங்குலா ॥
சாபஸ்திதே ரவௌ சங்கோச்சாயா ஸ்யாச்ச ஷடங்குலா ।

மீனஸ்திதே ரவௌ சங்கோச்சாயா ஸ்யாச்சதுரங்குலா ॥
உத்தராயணமாஸேஷு சாயா தக்ஷிணகா பவேத் ।
தக்ஷிணாயனமாஸேஷு சாயா சோத்தரகா பவேத் ॥

இவ்விதமாக சங்கு ஸ்தாபிதம் செய்யப்பட்டதும், மண்டலத்தின் வட்டத்தின் முற்பகல், மாலை நேரங்களில் பக்கவாட்டில் விழும் நிழலை அடையாளம் செய்துகொண்டும் அவ்விரு பீஜஸ்தானங்களில் நூலைப் போட்டால் அவ்விரு பீஜங்களை இணைக்கும் கோடு கிழக்கு-மேற்கை அறிவிப்பதாக இருக்கும். சங்குவின் தலையில் இரு பிந்துக்களிலும் சுழன்றுவரும் விதத்தில் மீன்போல் தோற்றம் உள்ளதை அமைத்து அதைத் தெற்கு-வடக்காக வைத்து, தெற்கு, வடக்கு இரு பகுதிகளையும் நூல்கொண்டு இணைத்தால் தெற்கு-வடக்கு திசைகளை அறியலாம்.

இது தொடர்பாக நமது நூலகத்தில் வெளியிட்டுள்ள விச்வகர்ம வாஸ்து சாஸ்திரத்தின் முன்னுரையில் Major N. B. Gadre, A. I. R. O., I. S. E., (Retd.,) M. E., (India) அவர்களாலும் ஸ்ரீ K. வாஸுதேவ சாஸ்திரி, B.A., அவர்களாலும் தரப்பட்டுள்ள கருத்துக்கள் தரப்படுகின்றன.

The First preliminary in planning is the determination of the true east and west and north and south lines. For this purpose a peg of 12 ANGULAS or 24 ANGULAS and like a gromon (one angula = 3/4 of an inch) is fixed upright and a circle is described on the ground with twice the length of the peg on the radius. A pin point is fixed on the top of the peg. The point where the shadow of the pin point of the peg just ends at the circumference of the circle are marked on the circle both in the morning and in the evening. The line joining them will be the true east to west line and a line cutting it perpendicularly will be the north to south line.

But this will be exactly true if the sun where to rise in the same point in the east and set in the same point in the west every day of the year. But the moves northward for six months and southward for six months and a correction has therefore to be applied for the movement of the sun line during the time between the two markings on the circumference. That is done by adding a third mark on the circumference in the morning next following. It will be found that there is a slight displacement of the prior point. The distance between them is due to the movement of the sun southword or northward during the twentyfour hours that have elapsed between the two markings in the morning. The actual correction that is necessary is for the displacement between the markings of the morning and evening. i. e. for about 8 hours. The morning marking therefore is shifted by one third of the total displacement for one whole day and that is connectd with the point for the evening.

Another correction for the actual declination of the sun from the zenith at noon is also mentioned so that the length of the shadow may be correted to the position of

the sun without declination. And the number of angulas by which the length of the shadow is to be dimished on account of declination is also given for various months. According to our text (Viswakarma Vastu Sastra) there is no shortining for the months of Vrishabha and Kanya. The names of months indecate that they are solar months and so Vrishabha is 15th May to 15th June. Therefore at the place where our text (V. V. Shastri) has been written the sun overhead about June first and October first. The sun is overhead the equator in March 22. It travels from Tropic of Cancer to Tropic of Capricon i. e. an angular distance of 47" in 6 months. Therefore it travals raghtly 8 degrees a month. From 22nd March to 1st June it is about 2¼ months. Therefore the latitued of the place is about 18 degree north. The length by which the shadow has to be shortened for the month in angulas is given as followings.

| | | |
|---|---|---|
| Mesha - 4* [2 or 3] | Simha - 4 | Dhanus - 6 |
| Vrishaba - 0 | Kanya - 0 | Makara - 3 |
| Mithuna - 3 | Thula - 2 | Kumbha - 6 |
| Kataka - 4 | Vrischika - 4 | Meena - 4 |

Maya Matham gives corrections for every ten days. But it gives nil correctionfor the peried from 10-th to the 30-th of Mesha. So in the place shose Mayamantam text is written the sun is overhead about 20th of Mesha. i.e., about 5th Ma.y. From 22nd March to 5th May is about 42 days. Therefore the place where Mayamantam has been written is about 2 or 3 further south. It has been costomany for Indian astronomers to take UJJAIN as the centre of their observation.Our authurs have evidently taken these Arstronomical facts from our astronomcal s treatises.

The corrections given in Mayamatham are shown here along with those of our texts (V. V. S.) one below the other for comparisons

| | Mesha | Vrishabha | Mithuna | Kataka |
|---|---|---|---|---|
| Maya = | 1-0-0 | 1-2-2 | 3-4-4 | 3-2-3 |
| Test (V. V. S) = | 2 or 3 | 0 | 3 | 4 |
| | **Simha** | **Kanya** | **Tula** | **Vrischika** |
| Maya = | 1-0-0 | 1-2-2 | 3-4-4 | 5-6-6 |
| Test (V. V. S) = | 4 | 0 | 2 | 4 |
| | **Dhanus** | **Makara** | **Kumbha** | **Meena** |
| Maya = | 7-8-8 | 7-6-6 | 5-4-4 | 3-2-1 |
| Test (V. V. S) = | 8 | 8 | 6 | 4 |

These corrections have to be made in both the shadows of the morning and evening. If that is done the line joining them must necessarily be paralled to the line joining the uncorrected points. The purpose of this correction has therefore to be further investigated.

*Introduction V. V. S., Page V,*
*T. M. S. S. M. library Publication, 1980.*

விஞ்ஞானம் வளர்ந்துள்ள இந்நாட்களில் வடதுருவத்தைக் காண்பிக்கும் காம்பஸ் கருவியால் திசை நிர்ணயிக்கப்படுகிறது

தேர்வு செய்யப்பட்ட பூமியில் அலையும் தீயசக்திகளை அகற்றிய பிறகு, பூமியின் உள்ளே உறைவிடமாகக் கொண்டுள்ள வாஸ்து தேவதையும் அவன் உடல்மீது அமர்ந்துள்ள தேவதகளையும் பூஜையாலும் பலிதானத்தாலும், ஹோமத்தாலும் திருப்தி அடையச்செய்தல் வேண்டும் என்பதால் வாஸ்து பற்றிய புராண-வரலாற்றுத் தொடர்பான-கருத்துக்கள் வழங்கப்படுகின்றன.




மனை சதுரமாக, நீள்சதுரமாக அமைந்தாலும், திசைகள் புரியாதபடியோ தீர்மானிக்க இயலாதபடியோ இருந்துவிட்டால் அத்தகைய மனையும் நன்மை பயக்காது என்பதால் சரியான திசைகளில் வீடு அமைக்கும் விதத்தில் மனை அமைவது அவசியம். புதிதாக மனை வாங்குபவர்கள் முக்கியமாக இதனைக் கருத்தில் கொள்ளவேண்டும்.







படத்தில் காட்டப்பட்டதுபோன்று மனை வடக்கு, வடமேற்கில் நீண்டிருப்பினும்; தெற்கு, தென்மேற்கில் நீண்டிருப்பினும் அத்தகைய மனையில் வீடு அமைப்பது நன்மை அளிக்கிறதில்லை.




தென்கிழக்கு மூலையில் நீண்டிருக்கும் மனையும் சிறப்பானதல்ல. தேர்வு செய்யப்பட்ட மனையில் அமைக்கும் வீட்டின் வெளிவாசல் வீதியை நோக்கியதாக கிழக்கு நோக்கியதாக இருந்து, அதன் வழியாக தெருவிற்கு வரும் வகையில் அமைத்தல் நல்லது.




கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு ஆகிய திசைகளும், தென்கிழக்கு, தென்மேற்கு, வடமேற்கு, வடகிழக்கு ஆகிய கோண திசைகளும் வாஸ்து சாஸ்திரத்தில் முக்கியத்துவம் பெற்றவையே..

**கிழக்கு**: திசை இந்திரனுக்கு உரிய திசையாகும். சூரியன் உதிக்கும் திசை என்பதால் இது மற்ற எல்லா திசைகளையும்விட அதிக முக்கியத்துவம் பெற்றதாகிறது. கீழ்த்திசைக் கடவுளர் ஒன்பது பேர்களில் முக்யமானவர் இந்திரன் என்பதால் இந்த திசை நோக்கி அமைக்கப்படும் வீடுகள் செல்வச் செழிப்புபெறும். கிழக்கு திசையில் ஒன்பது கடவுளர் உள்ளனர். (1) ஈசானன், (2) பர்ஜன்யன், (3) ஜயந்தன், (4) இந்திரன், (5) சூர்யன், (6) ஸத்யன், (7) ப்ருசன், (8) ஆகாச (அக்னி), 9. வாயு என்பவர்கள்.

**மேற்கு**: மேற்கு திசை வருணனுக்கு உரியது. வருணன் மழை, நீர் ஆகியவற்றிற்கு உரிய கடவுள். மேற்கு திசையில் உள்ள கடவுளர்களில் வருணன் முக்யமானவர் ஆகிறார். மேற்கு திசையில் (1) பித்ரு, (2) தௌவாரிக, (3) ஸுக்ரீவ, (4) புஷ்பதந்த, (5) வருணன், (6) அஸுர, (7) சோஷ, (8) பாப, (9) ரோக என்பவர்கள் ஆகின்றார்கள். இவர்களில் ரோக, பாப, அஸுர, தௌவாரிக, பித்ருக்கள் ஆகியவர்கள் தீய சக்தி பெற்றவர்கள்.

**தெற்கு** : தெற்கு திசைக்கு பிரதான அதிபதி யமன் ஆவார். பூஷா, விததன், க்ருஹக்ஷதன், யமன், கந்தர்வன், ப்ருங்கராஜன், மிருகன் ஆகிய ஏழு கடவுளர்கள் உள்ளனர். தெற்கு திசை சுபகாரியங்களுக்கு விலக்கப்பட்டதாகும்.

**வடக்கு** : வடதிசையின் பிரதான கடவுள் கணக்கற்றச் செல்வத்திற்கு அதிபதியான குபேரன் ஆவார். வடக்கு திசைக்கு திதி-அதிதி-உதிதி என்றும் பெயர் உண்டு. (வாஸ்து வித்யை எனும் நூலில் உதிதி என்றே குறிப்பிடப்படுகிறது.) ஸர்ப்ப, ஸோம, பல்லாட, முக்ய, அஹி ஆகிய கடவுளர்கள் உள்ளனர், வடதிசை சுபதிசையாகக் கருதப்படுகிறது.

**தென்கிழக்கு** : இது கிழக்கு-தெற்கு ஆகிய இரு திசைகளுக்கு இடையில் உள்ளது. இதன் அதிபதி அக்னி ஆவார். இங்குதான் வாஸ்து புருஷன் புதைக்கப்படுகிறார். இத்திசையில் அமைக்கப்பட்ட வீட்டின் தென்கிழக்கு மூலைப் பகுதி சமையல் செய்யும் இடம் நிறுவப்படவேண்டும்.

**தென்மேற்கு** : இது தெற்கு திசை-மேற்கு திசை இரண்டிற்கும் இடைப்பட்ட இடமாகும். இதன் அதிபதி நிர்ருதி ஆவார். அரக்க குணம் படைத்தவர். இத்திசை சுபத்தன்மை அற்றதாகும். அமைக்கப்படும் வீட்டின் தென்மேற்கு திசையில் கனம் மிகுந்த பொருள்களை வைக்கவும். கழிவரைக்குழி, மேல்நிலை தண்ணீர்த்தொட்டி, குளிக்கும் அறை ஆகியவை அமைக்கவும் பயன்படுத்தப்படவேண்டும். தேவையில்லாத விலக்கப்படத்தக்க ஆரோக்யமற்றவை வெளியேற்றப்படும் விதத்தில் இத்திசையில் சாதனங்கள் அமைக்கப்படவேண்டும்.

**வடமேற்கு** : இது மேற்கு-வடக்கு இரு திசைகளின் இடையில் அமைந்துள்ள இடமாகும். இதன் அதிபதி வாயு தேவதை ஆகும். வாயு ஜீவராசிகள் உயிர் வாழ்வதற்கு இன்றியமையாதது என்பதால் இத்திசையில் காற்று நுழைவதைத் தடுக்கக்கூடிய உயர்ந்த மரங்களை வளர்த்தலும், அமைக்கப்படும் வீட்டின் மேல்தளத்தை உயர்த்திக் கட்டுவதும் தவிர்க்கப்படவேண்டும்.

**வடகிழக்கு** : இது வடக்கு-கிழக்கு ஆகிய இருதிசைகளின் இடையில் அமைந்த பகுதியாகும். இதன் அதிபதி ஈசானன் என்ற கடவுளர் ஆவார். இத்திசையில் எக்காரணம் கொண்டும் டாய்லட்டுகள், உபயோகமற்ற பொருள்களை வைக்கும் அறை போன்றவற்றை அமைத்தல் கூடாது. ஆனால் கிணறு, நிலத்தடி நீரை எடுக்கும் குழாய்க்கிணறுகள் அமைக்கலாம். அமைக்கப்படும் வீட்டின் வடகிழக்கு திசையில் பூஜை அறை அமைக்க நலம் உண்டு.




மனையின் வடக்கில் வீதி இருந்து, வடக்கு வீதியின் வடகிழக்கில் தாழ்வாகவும், தென்கிழக்கில், தென்மேற்கில் மற்றும் வடமேற்கில் சற்று மேடாகவும் உயர்ந்து இருந்து அத்தகைய மனையில் வீடு அமைக்கப்பட்டால் (தொழிற்சாலை அமைக்கப்பட்டால்) சிறப்புடன் விளங்கும்.

மேற்கு வீதி | மனை

தெற்கு

மேற்கிலும்-தெற்கிலும் வீதி உள்ளதாக மனை அமைந்து, மேற்கு வீதி வடமேற்கிலும் சற்று உயர்வாகவும், தெற்கு வீதி தென்கிழக்கில் தாழ்ந்ததாகவும் இருந்தால் அத்தகைய மனையில் அமைக்கப்படும் வியாபார ஸ்தலம் அல்லது தொழிலகம் விருத்தியாகும். (படம். )

**வாஸ்து புருஷன் பற்றி**

"சில்ப ரத்னம்" எனும் நூலில் கூறப்பட்டுள்ள கருத்தாவது : முன்பு தேவஸுர யுத்தம் நடந்து திருமாலின் பெருமைமிக்க உதவியால் அசுரர்கள் தோல்வியுற்று வீழ்ந்த பொழுது அசுர குருவான சுக்ராசார்யார் மிகுந்த கோபம் கொண்டு யாகம் ஒன்று செய்தார். அந்த யாகத்தில் நல்ல லக்ஷணமுள்ள பசு, ஆடு ஒன்றைப் பலியிட்டார். வியர்வையால் நனைந்த கையுடன் ஹவிஸை அக்னியில் ஹோமம் செய்தபொழுது ஹவிஸ்ஸானது வழுக்கி தரையில் விழுந்தது. அந்த ஹவிஸ் உடனே ஆட்டுத்தலையுள்ள வானளாவிய தோற்றமுள்ள அசுரனாக மாறியது. அந்த அசுரசன் சுக்ராசார்யரிடம், "முனிச்ரேஷ்டரே! நான் என்ன செய்யவேண்டும் கூறுங்கள்" எனக்கேட்டதும். மிகுந்த பயங்கரமான தோற்றமுள்ள அந்த அசுரனை நோக்கி, "அறிவற்ற தேவர்களை ஸ்வர்க்க லோகத்திலிருந்து விரட்டியடிப்பாயாக" என்று கூறினார். அந்த அசுரனும் தேவர்களைத் தன் கொடூரமான பேரொலியால் அச்சமுறச் செய்து, தம் வாயிலிருந்து தோன்றும் தீப்பிழம்பால் மூவுலகையும் எரிப்பவன்போல் அச்சமுறச் செய்து, தேவர்களை சுவர்க்கத்திலிருந்து விரட்டியடித்தான்.

பயமுற்ற தேவர்கள் சிவபெருமானைச் சரணடைந்து, தம் பயத்திற்கான காரணத்தைக் கூறினர். அச்சமயம் கடும் கோபம் கொண்ட சிவபெருமானானின் மூன்றாவது கண்ணிலிருந்து தீப்பிழம்பு ஒன்று தோன்றியது. "சுக்ரனையும், சாகாசுரனையும் கொன்றுவா" என்று சிவபெருமான் கூறியது கேட்ட அத்தீச்சுடர், சுக்ராசார்யரையும், சாகாசுரனையும் துறத்தியது.

மூவுலகிலும் புகலிடம் கிடைக்காததால் சுக்ராசார்யர் தம் உடலைச் சிறியதாக்கிக் கொண்டு, சிவபெருமானின் காது வழியாக அவருடைய வயிற்றினுள்ளேயே பிரவேசித்தார். சுக்ராசார்யாரின் சமயோசித அறிவைக் கண்டறிந்த சிவபெருமான், "சுக்ராசார்யரே! பயப்படவேண்டாம். உமது அறிவாற்றல் கண்டு மகிழ்ந்தேன். ஒன்பது கிரஹங்களிலும் சிறந்தவராவீர்" என்றுகூற, வெளிவந்த சுக்ராசார்யர் அந்த அசுரனைச் சிவபெருமானின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கச் செய்தார்.

அந்த அசுரனும் (ச்சாகாசுரன் - ஆட்டுத்தலையுடன் கூடிய அசுரன்) சிவபெருமானை வணங்கியதும், குனிந்த தலையுடன் நின்ற அந்த அசுரனைக்கண்டு, "உனக்கு வேண்டியதைக் கேள். எதுவேண்டுமாயினும் தருகின்றேன்" என்றுகூற, அந்த அசுரன், "ப்ரபோ! அறியாமையால் தங்களுக்குப் பிடித்தமில்லாததைச் செய்துவிட்டேன். மன்னிக்க வேண்டும். தங்களின் அருளால் இந்த பூமியினுள்ளே நான் வாழ்ந்துவருகிறேன். தேவர்களுக்கும் பாதகமில்லாதவாறு இந்த வரத்தை அருளவேண்டும். என்மீது அமர்ந்து ப்ரம்மா முதாலன தேவர்கள் பூஜை பெறவேண்டும்" என்று வேண்டினான். சிவபெருமானும் பூமியினுள் வசிப்பதற்கு வரம் வேண்டிய நீ இனி வாஸ்து ரக்ஷகனாக விளங்குவாய்

". . . . . . . . . . . प्राह वस्तुं वरं त्वया ।
याचितो यत् ततो नाम्ना वास्तुपोऽसि "

". . . . . . . . . . ப்ராஹ வஸ்தும் வரம் த்வயா .
யாசிதோ யத் ததோ நாம்நா வாஸ்துபோ஽ஸி "

Silpa Ratna - Page 33 / 22

இன்றுமுதல் பூலோகத்தில் தேவாலயமாக இருந்தாலும், மனிதன் வசிப்பதற்குரிய வீடாக அல்லது மாளிகையாக இருந்தாலும் அவற்றை அமைப்பதகு முன்னதாக உன்னைப் பூஜிக்கட்டும் (பூஜிக்கவேண்டும்). மலர்களாலும், தூப, தீபங்களாலும் பற்பல பிற பழங்கள் முதலான பொருள் கொண்டும் உன்னையும் உன் உடல் மீதுள்ள தேவர்களையும் பூஜிக்கவேண்டும். (அந்த அசுரன் இயல்பில் அசுரத்தன்மை உள்ளவனாதலால், அவன் தன் சொல்லைக் காப்பாற்றாமல் இருந்துவிடுவானோ என்று தேவர்கள் சிலர் அவன் உடல்மீது அமர்ந்து அவன் எழுந்துவிடாதவாறு அழுத்திப்பிடித்துக் கொண்டுள்ளனர் என்பதால்) என்பது எனது ஆணையாக இருக்கும். வாஸ்து பூஜை செய்யாமல் வீடு அல்லது மாளிகை அமைத்தால் அமைக்கப்பட்ட அந்த வீடும், மாளிகையும் தீமை விளைவிப்பதாகவே இருக்கும் என்று சிவபெருமான் கூறி சில தேவர்களையும் இது விஷயமாக நியமனம் செய்துவிட்டு மறைந்தார். அதுமுதல் அசுரன், சிவபெருமானின் திருவடிகளில் தலைவைத்து வணங்கியதால் வாஸ்து புருஷன் இன்றளவும் ஈசான்ய திசையில் (வடகிழக்கில்) கவிழ்ந்த முகத்துடன் இருந்துவருகிறான்.

यद्देश दिङ्मुखं शम्भोः पादयोः पतितोऽसुरः ।
शुक्रेण देवैरुषितः तथैवाभूत् विभोः वरात् ।।
तथैवाऽधोमुखोऽद्यापि वास्तुरीशानदिङ्मुखः ।।

யத்தேச திங்முகம் சம்போ: பாதயோ: பதிதோ஽ஸுர:।
சுக்ரேண தேவைருஷித: ததைவாபூத் விபோ: வராத் ।। .
ததைவ அதோமுகோ஽த்யாபி வாஸ்துரீசானதிங்முக:।।

ஈசானத்தில் (வடகிழக்கில்) வாஸ்துபுருஷனின் தலையும், நிர்ருதி (தென்மேற்கில்) திசையில் பாதங்களும், வாயு (வடமேற்கு) திசையிலும், அக்னி (தென்கிழக்கு) திசையிலும் இருகைகளிலும் கணுக்கால்களிலும் அமர்ந்து, இரண்டு உள்ளங்கைகளையும் தம் மார்பின்மீது வைத்துக்கொண்டு, கவிழ்ந்த முகத்துடன் வாஸ்து புருஷன் அமர்ந்திருக்கின்றான்.

"மத்ஸ்ய புராண"த்திலும் வாஸ்து கட்டிட அமைப்புபற்றி கூறப்படுகிறது. வாஸ்து புருஷன் பற்றி கந்தபுராண நூலில் கூறப்படுகிறதாவது :- ஒவ்வொரு குடியிருப்பு மனையிலும், அது சிறியதாயினும், பெரியதாயினும் வாஸ்து புருஷன் கவிழ்ந்த தலையுடன் படுத்தவாறு இருப்பதாகக் கூறப்படுள்ளது.

வாஸ்து புருஷன் பற்றிய சுவையான வரலாறு "மத்ஸ்ய புராண"த்தில் 115வது அத்யாயத்தில் கூறப்பட்டுள்ளது : அந்தகாசுரனுடன் போரிட்டு அவனைக் கொன்று சிவபெருமானின் நெற்றியிலிருந்து பெருகிய வியர்வைத் துளிகள் பூமியில் வீழ்ந்தபொழுது ஒரு பயங்கரத் தோற்றம் உள்ள பூதம் ஒன்று தோன்றியது. அது தன் பசியைத் தணித்துக்கொள்ள யுத்த பூமியில் வீழ்ந்துகிடந்த அனைத்தையும் தின்ற பின்னரும் பசி தணியாததால் சிவபெருமானைக் குறித்துத் தவம் செய்யலாயிற்று. அதன்முன் தோன்றிய சிவபெருமான், "வேண்டிய வரம் கேள்" எனக் கூறியதும், அந்த பூதம் "மூன்று உலகங்களையும் எரித்து அழிக்கும் திறன் எனக்கு ஏற்படவேண்டும்" எனக்கேட்க, சிவபெருமானும் அவ்வாறே ஆகுக என வரமளித்தார்.

அந்த பூதமும் மூன்று உலகங்களையும் அழித்துவிடும் விதத்தில் முதலில் பூமியை விழுங்க முற்பட்டபொழுது, ப்ரம்மா முதலிய தேவர்கள் அதனைச் சூழ்ந்து நின்று அதனைக்கட்டி பூமியில் குப்புறத்தள்ளி, பூதத்தின் உடல்மீது அழுத்திப் பிடித்துக்கொண்டு மீண்டும் எழாதவாறு செய்தனர்.

கவிழ்ந்த தலையுடன் பூமியில் குப்புறப்படுத்த நிலையில் உள்ள அந்த பூதம், தேவர்களை நோக்கி, "இந்த நிலையில் உள்ள எனக்கு என்ன உணவு" எனக்கேட்க, ப்ரம்மன் முதலானோர், பூமியில் உள்ளோர் வீடு முதலான கட்டிடங்கள் கட்டுவதற்குமுன் மனைப்பகுதியில் செய்யும் பூஜையில் வழங்கும் பொருள்களும் (பலி) அந்தணர்கள் அன்றாடம் செய்யும் வைச்வதேவ சடங்கில் வழங்கும் பொருளும்

விதிமுறையின்றி செய்யப்படும் யாகங்களில் வழங்கப்படும் பொருளும் உனக்கு உணவாக ஆகட்டும் என்று கூறினார். **"आज्ञानात्तु कृतो यज्ञः तवाहारो भविष्यति"** ப்ரம்மன் முதலான 45 தேவர்கள் அந்த பூதத்தை மீண்டும் எழுந்துவிடாதபடி அதன்மீது அமர்ந்து பிடித்துக்கொண்டு அங்கேயே வசித்த படியால் அந்த பூதம் அதுமுதல் **வாஸ்து** என்றும் **வாஸ்து புருஷன்** என்றும் வழங்கப்படலாயிற்று. கட்டிடம் கட்டப்படுவதற்கு முன் செய்யப்படும் சாந்தி சடங்கும் வாஸ்து யக்ஞம் என்று வழங்கப்படலாயிற்று.

பூமியில் கவிழ்ந்த நிலையில் உள்ள வாஸ்து புருஷனை தேவர்கள் குறுக்காகவும் நெடுக்காகவும் பத்து பத்து கயிறுகளைக் கொண்டு அவன் எழுந்திருக்க முடியாதவாறு கட்டி அவன் உடல்மீது இருந்து காவல் காத்து வருகிறார்கள்.

கிழக்கு-மேற்காக 10 கயிறுகளும், தெற்கு-வடக்காகவும் 10 கயிறுகளும், சம அளவுள்ள இடைவெளியுடன் அமைந்த பகுதிகள் 81 ஆகும். இவை பதங்கள் (இடங்கள், ஸ்தானங்கள்) என்று வழங்கப்படும்.

இந்த 81 பதங்களில் ப்ரம்மா நடுவில் உள்ள 9 பதங்களையும், 20 தேவர்கள் தலா ஒரு பதம் வீதம் 20 பதங்களையும் மற்றும் 20 தேவர்கள் தலா இரண்டு பதங்கள் வீதம் 40 பதங்களையும், ப்ரம்மாவை நோக்கியுள்ள நான்கு தேவர்கள் தலா மூன்று பதங்கள் வீதம் 12 பதங்களையும் வகிக்கிறார்கள். (தமதாக்கிக் கொண்டுள்ளார்கள்) 1. ப்ரம்மா, நடுவில் உள்ள 9 பதங்கள். ஒரு ஆண்டில் சித்திரை, வைகாசி மாதங்களிலும்; ஆடி, ஆவணி மாதங்களிலும்; ஐப்பசி, கார்த்திகை மாதங்களிலும்; தை, மாசி மாதங்களிலும் வாஸ்து புருஷன் விழித்து எழுகின்றார் என்றும் அந்த சமயத்தில் குடியிருப்புக்களான வீடுகட்டுவோரும், ஆலயங்கள் அமைப்போரும், கிணறு, குளம், கால்வாய் வெட்டுபவர்களும் வாஸ்துபுருஷனுக்கு வாஸ்துசாந்தி செய்து வழிபடவேண்டும். இதற்கு வாஸ்து யக்ஞம் என்றே சொல்லப்படுகிறது. வாஸ்து சாந்தி செய்யாமல் கட்டப்படும் கட்டிடங்களும், வீடுகளும்

சிறந்து விளங்குவது இல்லை என்பது பலரும் அறிந்த உண்மையாகும்.

வாஸ்து மண்டபம் இரண்டுவகைப்படும். கிழக்கு - மேற்காக மேற்கிலிருந்து கிழக்கு நோக்கி 10 கோடுகள் சமசதுரம் உள்ளதாக வலதுபுறமாக அமைத்து, தெற்கிலிருந்து வடக்குப்புறமாக 10 கோடுகள் அமைத்தால் 81 பதங்கள் உள்ள மண்டலம் (ஏக+அசீதி பதம்) ஆகும். இதுபோலவே 9 கோடுகள் முன்னால் குறிப்பிட்டது போலவே அமைத்தால் 64 பதங்கள் உள்ள "சதுஷ்ஷஷ்டி பதம்" எனும் மண்டலமாகும்.

**வாஸ்து புருஷனின் உடல்மீது அமர்ந்துள்ள தேவர்கள்**

| | | |
|---|---|---|
| 1. | தலை | சிகீ (ஈசன்) |
| 2. | வலது கண் | பர்ஜன்யன் |
| 3. | வலது காது | ஜயந்தன் |
| 4. | வலது தோள்பகுதி | மகேந்திரன் |
| 5. | வலது புஜம் | சூரியன் |
| 6. | வலது புஜப்பகுதி | ஸத்யன் |
| 7. | வலது முழங்கை | ப்ருசன் |
| 8. | வலது மணிக்கட்டுக்கு மேல் முழங்கைக்குக்கீழே | அந்தரிக்ஷன் (ஆகாசன்) |
| 9. | வலது முழங்கைக்குமேல்பகுதி | வாயு (அக்னி) |
| 10. | வலது மணிக்கட்டு | பூஷா |
| 11. | வலது பார்சுவம் (Right side) | விததன் |
| 12 | வலது பார்சுவம் (Right side) | கிருஹக்ஷதன் |
| 13. | வலது துடை | யமன் |
| 14. | வலது முழங்கால் | கந்தர்வன் |
| 15. | வலது முழங்காலுக்கும் கணுக்காலுக்கும் இடைப்பகுதி | ப்ருங்கராஜன் |
| 16. | வலது புட்டம் | ம்ருகன் |
| 17. | பாதங்கள் | பித்ருக்கள் |
| 18. | இடது புட்டம் | தௌவாரிகன் |
| 19. | இடது முழங்காலுக்கும் கணுக்காலுக்கும் இடைப்பகுதி | ஸுக்ரீவன் |

| | |
|---|---|
| 20. இடது முழங்கால் | புஷ்பதந்தன் |
| 21. இடது துடை | வருணன் |
| 22. இடது பாகம் (Left side) | அஸுரன் |
| 23. இடது பாகம் (Left side) | சேஷன் or சோஷன் |
| 24. இடது மணிக்கட்டு | பாபன் |
| 25. இடது பாகு (கை) முழங்கைக்கும் மணிக்கட்டுக்கும் இடைப்பகுதி | ரோகன் |
| 26. இடது புஜம் மணிக்கட்டுக்கும் தோள்பகுதிக்கும் இடைப்பகுதி | அஹிர்புத்ன்யன்(அஹி) |
| 27. இடது முழங்கை | முக்யன் |
| 28. இடது கை | பல்லாடன் |
| 29. இடது கை | ஸோமன் |
| 30 இடது தோள் | ஸர்ப்பன் |
| 31. இடது காது | அதிதி |
| 32. இடது கண் | திதி |
| 33. முகம் | ஆபன் |
| 34. வலது கை | ஸவிதா |
| 35. மேட்ர (The male organ of genaration) | ஜயந்தன் |
| 36. இடது கை | ருத்ரன் |
| 37. வலது கை | அர்யமா |
| 38. வலது கை | ஸாவித்ரன் |
| 39. வலது வயிறு (விலாப்பகுதி) | விவஸ்வான் |
| 40. வ்ருஷண (The scrotum) | விபுதாதிபன் |
| 41. இடது வயிறு (விலாப்பகுதி) | மித்ரன் |
| 42. இடது கை | ராஜயக்ஷ்மா |
| 43. இடது கை | ப்ருத்வீதரன் |
| 44. மார்பு | ஆபவத்ஸன் |
| 45. இதயம் | ப்ரம்மா |
| (46. தொப்பூழ் | வ்ருஷ வாஸ்து |
| 47. | வாஸ்துபுருஷன்) |

## வாஸ்து மண்டலம்

### வாஸ்து பீடம்

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 |
|---|---|---|---|---|---|---|---|---|
| 32 | 33 | | | | | | 34 | 10 |
| 31 | | 44 | | 37 | | 38 | | 11 |
| 30 | | | | | | | | 12 |
| 29 | | 43 | | 45 | | 39 | | 13 |
| 28 | | | | | | | | 14 |
| 27 | | 42 | | 41 | | 40 | | 15 |
| 26 | 36 | | | | | | 35 | 16 |
| 25 | 24 | 23 | 22 | 21 | 20 | 19 | 18 | 17 |

**ஏகாசீதி (81) பதம்**

## வாஸ்து மண்டலம் - வாஸ்து பீடம்

சிகீ (ஈசன்) பர்ஜன்யன், அந்தரிக்ஷன், வாயு, பூஷா, மிருகன், பித்ருக்கள், தௌவாரிகன், பாபன், ரோகன், அஹி (அஹிர்புத்ன்யன்), திதி, ஆபன், சவிதா, ஜயன், ருத்ரன், ஸாவித்ரன், விபுதாதிபன், ராஜயக்ஷ்மா, ஆபவத்ஸன் ஆகிய இருபது தேவர்கள் தலா ஒரு பதத்தையும்; ஜயந்தன், குலிசாயுதன், ஸூர்யன், ஸத்யன், ப்ருசன், விததன், கிருஹக்ஷதன், யமன், கந்தர்வன், பிருங்கராஜன், ஸுக்ரீவன், புஷ்பதந்தன், வருணன், அஸுரன், (ஸர்ப்பன்) சேஷன், முக்யன், பல்லாடன், சோமன், அர்களன், அதிதி ஆகிய இருபது தேவர்கள் தலா 2 பதங்கள் வீதம் 40 பதங்களையும்; அர்யமா, விவஸ்வான், மித்ரன், ப்ருத்வீதரன் (மஹீ)தரன் ஆகிய நால்வரும் தலா மூன்று பதங்கள் வீதம் 12 பதங்களையும்; ப்ரம்மா 9 பதங்களையும் ஆக 81 பதங்களையும் ஆட்சி செய்கின்றனர்.

இந்த 81 பதங்கள் கொண்ட வாஸ்து மண்டலத்தை **மயமதம்** நூல் "சண்டிபதம்" என்றும், "பரமசாயீ பதம்" என்றும் கூறுகிறது.

ஒரு மனையில் (சதுரமாக அமைத்துக்கொண்ட மனையில்) வீடு அல்லது பெரிய மண்டபம் அமைக்கும் பணி ஆரம்பிப்பதற்கு முன்னால் அந்த மனையில் நன்கு சுத்தம் செய்யப்பட்டுள்ள சமதலமான இடத்தில் பந்தலிட்டு, கிழக்கு - மேற்காக சம அளவினதாக10 நூல்களை முளை அடித்துக் கட்டி, அதேபோல் தெற்கு-வடக்காக 10 நூல்களைக் கட்டி சம அளவுள்ள பதங்கள் உள்ளதாக அமைக்கவேண்டும். (ஒவ்வொரு முனையிலும் சிறு முளைக்குச்சிகளை அடித்து நூல்களைக் கட்டினால் 81 சம அளவுள்ள பதங்கள் கிடைக்கும். அவற்றில் எந்த எந்த பதத்தில் எந்த எந்த தேவர்கள் இடம்பெற்றுள்ளார்களோ அவர்களுக்கு முறைப்படிக்கு பூஜை செய்து சந்தனம், குங்குமம், புஷ்பம், அக்ஷதை கொண்டு பூஜைசெய்து, உரிய பொருள்களைப்

படைத்தல் வேண்டும். இந்தப் படைக்கப்படும் பொருள்கள் நிவேனப் பொருள்கள் என்றும், பலி திரவியம் என்றும் வழங்கப்படும்.

பொதுவாக எல்லாத் தேவர்களுக்கும் நெய், தயிர் கலந்த சுத்தமான அன்னம்தான் படைக்கப்படும் (நிவேதனப்) பொருள்களாகும். இது சாமான்யமான பொதுவான பலிதிரவியமாகும். அதுசமயம் சந்தனம், குங்குமம், புஷ்பம் முதலானவற்றையும் சமர்ப்பிக்கவேண்டும்.

மயமதம் நூலில் ஒவ்வொரு தேவதைகளுக்கும் ஒவ்வொரு விதமான பொருளைக் குறைவின்றி (படைக்க) சமர்ப்பிக்கவேண்டும் என்று கூறப்பட்டுள்ளது. இந்த விதமான பலி திரவியம் விசேஷ பலி திரவியம் எனப்படும். சாமான்ய பலி திரவியத்தையும், விசேஷ பலி திரவியத்தையும் எல்லா தேவர்களுக்கும் வழங்கவேண்டும் என்றும் கூறப்பட்டுள்ளது.

81 பதங்கள், 64 பதங்கள் கொண்ட வாஸ்து மண்டபத்தில் உள்ள 45 முக்கிய தேவதைகளுக்கும் பூஜை, ஹோமம் (விதிமுறைகளைப் பின்பற்றி) அக்னி வளர்த்து, அதில் அந்தந்த தேவதைகளுக்கான மந்த்ரம் சொல்லி பொருள்களை வழங்கும் சடங்கு ஹோமம் எனப்படும்..) தவிர பாயஸ பலியும் வழங்கவேண்டும். மண்டலத்திற்கு வெளிப்புறத்தில் உள்ள சரகீ முதலான 16 தேவதைகளுக்கு அரிசியை வேகவைக்கும்பொழுது உளுந்து அல்லது உளுந்து மாவும் கலந்து வேகவைத்து அந்த அன்னத்தை, அல்லது சுத்தமான அன்னத்தில் உளுந்து மாவு, தயிர் இரண்டையும் கலந்து அந்த அன்னத்தை (மாஷபக்த பலி எனப்படும் அந்த அன்னத்தை) அவசியம் தவறாமல் அளிக்கவேண்டும்.

குறிப்பு : ஓலை வீடுகள், கீத்து அல்லது பனை ஓலை வேயப்பட்ட சிறு குடில் போன்ற வீடு விஷயத்தில் வாஸ்து பரீக்ஷை போன்ற விதிமுறை அவசியமில்லை. (வால்மீகி ராமாயணத்தில், வனத்தில் ராமன் வசிப்பதற்காகவே குடில் (ஆச்ரமத்தில்) அமைத்த லக்ஷ்மணன் வாஸ்து பூஜைக்காகப்

பொருள்களைத் தயார் செய்து அந்த விபரங்களை ராமனிடம் தெரிவிப்பதாகக் கூறப்பட்டுள்ளது. ஆகையால் குடிசை போன்ற பகுதிகள் விஷயத்தில் வாஸ்து பூஜை, ஹோமம், வாஸ்துசாந்தி என்பது (கட்டாயமான) அவசியமானதல்ல; செய்தாலும் தவறல்ல, நல்லதே.)

பூமியில் கவிழ்ந்து படுத்துள்ள வாஸ்து புருஷனைத் தேவர்கள் குறுக்காகவும், மேலாகவும் 10+10 கயிறுகளைக் கொண்டு கட்டியுள்ளனர். கட்டப்பட்டுள்ள கயிறுகளின் இடையில் உள்ள சம அளவுள்ள 81 சதுரங்கள் பதங்கள் என்று சொல்லப்படும். ஒவ்வொரு பதமும் அங்கு அமர்ந்துள்ள தேவர்களுக்கு உரியனவாகும். வாஸ்து புருஷனின் உடலின் வெளிப்புறமாக 32 தேவர்களும், உட்புறத்தில் 13 தேவர்களும் அமர்ந்துள்ளனர்.

**நித்யவாஸ்துவின் நிலை :**

தலையை வடகிழக்குப் பகுதியிலும், கால்களைத் தென்மேற்குப் பகுதியிலும் வைத்துக் கவிழ்ந்து படுத்துள்ள நிலையே நித்யவாஸ்து புருஷனின் நிலையாகும். ஆனால் புரட்டாசி, ஐப்பசி, கார்த்திகை மாதங்களில் கிழக்கில் தலை வைத்தும், மார்கழி, தை, மாசி மாதங்களில் தெற்கில் தலை வைத்தும், பங்குனி, சித்திரை, வைகாசி மாதங்களில் மேற்கில் தலை வைத்தும், ஆனி, ஆடி, ஆவணி மாதங்களில் வடக்கில் தலை வைத்தும் படுத்திருக்கிறார்.

வீடு அல்லது பெரிய மண்டபங்கள், மாளிகைகள் அமைக்கும் பணியினை சுபமான திதிகள், நக்ஷத்திரங்கள், சுபயோகங்கள் உள்ள நாட்களில்; சனி, செவ்வாய் நீங்கலாக உள்ள நாட்களில் நல்ல நேரங்களில் ஆரம்பிக்கவேண்டும். வீடு அமைப்பவர் (கட்டிடச் சொந்தக்காரர்) குறைவற்ற நல்ல அமைதியான ஆரோக்யமான வாழ்க்கை வாழ்வதற்கு நல்ல சுபதினங்களில் நல்ல நேரத்தில் வாஸ்து வேலைகளை ஆரம்பிப்பது அவசியம் என்று வாஸ்து நூல்கள் பலவும் கூறுகின்றன.

**நல்ல நக்ஷத்திரங்கள்**

त्र्युत्तरे मृगरोहिण्यां पुष्यमैत्रे करत्रये ।
धनिष्ठाद्वय पौष्णेषु गृहारम्भः प्रशस्यते ।।

த்ரயுத்தரேம்ருகரோஹிண்யாம் புஷ்யமைத்ரே கரத்ரயே ।
தனிஷ்டாத்வய பௌஷ்ணேஷு க்ருஹாரம்ப: ப்ரசஸ்யதே ॥

உத்தரம், உத்தராடம், உத்திரட்டாதி, மிருகசீர்ஷம், ரோகிணி, பூசம், அனுஷம், ஹஸ்தம், சித்திரை, சுவாதி, அவிட்டம், சதயம், ரேவதி ஆகிய நக்ஷத்திரங்கள் உள்ள நாட்களில் வீடுகள் முதலானவை அமைக்கும் பணி தொடங்க நல்ல நாட்களாகும்.

**நல்ல திதிகள்**

द्वितीया पञ्चमी मुख्या तृतीया षष्ठिका तथा ।
सप्तमी दशमी चैव द्वादश्येकादशी तथा ।
त्रयोदशी पञ्चदशी तिथयः स्युः शुभावहाः ।।

த்விதீயா பஞ்சமீ முக்யா த்ருதீயா ஷஷ்டிகா ததா ।
ஸப்தமீ தசமீ சைவ த்வாதச்யேகாதசீ ததா ॥
த்ரயோதசீ பஞ்சதசீ திதய: ஸ்யு: சுபாவஹா: ॥

துவிதீயை, திருதீயை, பஞ்சமீ, ஷஷ்டி, ஸப்தமீ, ஏகாதசீ, துவாதசி, திரயோதசி, பௌர்ணமி ஆகிய திதிகள் வாஸ்து அமைக்கும் பணி தொடங்க சுபமான திதிகளாகும். பிரதமையில் தொடங்கினால் தரித்திரம், சதுர்த்தியில் பணச் செலவு ஆகும், ஆனால் கட்டுமான வேலை நடைபெறாது. அமாவைசாயில் தொடங்கினால் அரசாங்க பயம், கிருஷ்ண சதுர்தசி (தேய்பிறை 14ம் நாள்) வீடுகட்டும் பணி ஆரம்பிக்கப்பட்டால் மனையாளுக்குத் தீமை.

पूर्णिमान्तोऽष्टमी यावत् पूर्वास्यं वर्जयेद् गृहम् ।
उत्तरास्यं न कुर्वीत नवम्यादिचतुर्दशीम् ।।

अमावास्याष्टमी यावत् पश्चिमास्यं विवर्जयेत् ।
नवम्या दक्षिणास्यं च यावत् शुक्लचतुर्दशीम् ।।

பூர்ணிமாந்தோsஷ்ட யாவத் பூர்வாஸ்யம் வர்ஜயேத் க்ருஹம் ।
உத்தராஸ்யம் ந குர்வீத நவம்யர்திசதுர்தசீம் ॥

அமாவாஸ்யாஷ்டமீ யாவத் பச்சிமாஸ்யம் விவர்ஜயேத் ।
நவம்யா தக்ஷிணாஸ்யம் ச யாவத் சுக்லசதுர்தசீம் ॥

வளர்பிறை அஷ்டமீ முதல் பௌர்ணமீ முடியவுள்ள நாட்களில் கிழக்கு முகமாக வீடு அமைக்கும் பணி தொடங்கலாகாது. நவமீ முதல் சதுர்தசி முடியவுள்ள நாட்களில் வடக்கு முகமாகவுள்ள வீடுகட்டும் பணியும், அமாவாஸை முதல் அஷ்டமீ வரையில் உள்ள நாட்களில் மேற்கு முகமாக வீடுகட்டும் பணியும் நவமி முதல் வளர்பிறை சதுர்தசி வரையிலான நாட்களில் தெற்கு முகமாகவுள்ள வீடுகட்டும் பணியும் தொடங்கலாகாது.

கிருஹ ஆரம்ப லக்னத்திற்கு 6-ல் சூரியன், 7-ல் புதன், லக்னத்தில் குரு, 4-ல் சுக்ரன் 3-ல் சனி இருந்தால் அந்த லக்னத்தில் அமைக்கப்படும் வீடு 100 ஆண்டுகள் உறுதியாக இருக்கும். குரு 5-லும், சுக்ரன் லக்னத்திலும் இருக்கும் காலத்தில் வீடு அமைத்தால் அது 200 ஆண்டுகள் வரையில் சிறப்புடன் இருக்கும். அதேபோல் குரு கேந்திரத்திலும், சூரியன் 11லும், புதன் 10லும், சுக்ரன் லக்னத்திலும், சனி 11லும், இருக்க அமைக்கப்படும் வீடு 100 ஆண்டுகள் சிறப்புடன் இருக்கும். கிருஹாரம்ப லக்னத்திற்கு சந்திரன் 10ம் இடத்திலும், செவ்வாய் 11லும், குரு 4லும், சனி 11லும் இருக்க அமைக்கப்படும் வீடு 80 ஆண்டுகள் இருக்கும்.

भृगुर्विलग्ने यदि मीनसंस्थः
कर्के गुरुः तुर्यं गृहं गतश्चेत् ।
शनिस्तथैकादशगस्तुलायां
गेहं चिरं श्रीसहितं तदा भवेत् ।।

ப்ருகுர்விலக்நே யதி மீனஸம்ஸ்த:
கர்க்கே குரு: துர்ய க்ருஹம் கதஸ்ச்சேத் ।
சனிஸ்ததைகாதசகஸ்துலாயாம்
கேஹம் சிரம் ஸ்ரீஸஹிதம் ததா பவேத் ॥

வாஸ்து சாஸ்திரம் சோதிடத்துடன் நெருங்கிய தொடர்புள்ளதே. ஒரு வீடு அல்லது மாளிகை, கட்டிடம் கட்டும் பணி தொடங்கும் லக்னத்திற்கு 12ம் இடத்தில் அல்லது 8ம் இடத்தில் அசுபகிரஹங்கள் இல்லாமலிருந்து, அவை 3-6-11ஆம் இடங்களுக்குள் ஏதேனும் ஒன்றிரண்டு அல்லது மூன்றிலும் இருந்து, சூரியன் இரட்டித்த ராசியிலும் இல்லாமல் இருந்தால் நல்லது. அம்மாதிரியான ஒரு லக்னத்தில் வீடு அல்லது கட்டிட நிர்மாணப்பணி ஆரம்பித்தல் நல்லது.

ஒன்பது கிரஹங்களிலும் குரு பலம் மிகுந்தவர் ஆவார். அவருடைய ஆற்றல் பார்வை பலம் காரணமாகவே அவர் ஞானகாரகர் (Lord of wisdom) தனகாரகன் (Lord of wealth) மற்றும் புத்திரகாரகன் (Lord of issues) என்று அழைக்கப்படு கிறார்.

रवौ गृहस्थो गृहिणी शशाङ्के
धनं सिते देवगुरौ च सौख्यम् ।
विनाशमायाति बलेन हीने
नीचस्थिते वाऽस्तमुपागते वा ॥

ரவௌ க்ருஹஸ்தோ க்ருஹிணீ சசாங்கே
தனம் ஸிதே தேவகுரௌ ச ஸௌக்யம் ।
விநாசமாயாதி பலேன ஹீனே
நீசஸ்திதே வா஽ஸ்தமுபாகதே வா ॥

சூரியன் நீசம் அடைந்திருக்கும்பொழுதும், சந்திரன், சுக்ரன், குரு ஆகியோர் பலமில்லாமல் அஸ்தமனம் அடைந்தோ நீசம் பெற்றே இருக்கும் காலத்தில் வீடு அல்லது மாளிகை, மண்டபம் ஆலயம் முதலானவற்றை அமைக்கும்

பணியைத் தொடங்கலாகாது. சூரியன் நீசமானபொழுது தொடங்கினால் வீட்டின் யஜமானனுக்கு ஆகாது. சந்திரன் பலமில்லாதபொழுது தொடங்கினால் வீட்டின் யஜமானிக்கு ஆகாது. சுக்ரன் பலமில்லாதபொழுது தொடங்கினால் செல்வம் பாழாகும். குரு பலமில்லாதபொழுது தொடங்கினால் சுகமும் கெடும்.

சுக்ரன் லக்னத்தில், மீனத்தில் உச்சம், குரு கடகத்தில் அல்லது 4வது கேந்திரத்தில், சனி துலாத்தில் அல்லது 11இல் இருக்கும் சமயம் அமைக்கப்படும் வீடு பல்லாண்டுகள் செல்வச் செழிப்புடன் விளங்கும்.

உச்ச சுக்ரன் லக்னத்தில் இருப்பினும் அல்லது உச்ச சனி 11இல் இருக்கும் காலத்தில் வீடு அமைக்கப்பட்டால் அந்த வீடு செல்வவளம் மிகுந்து விளங்கும்.

### லக்னம் முதலான பாவங்களில் உள்ள கிரஹங்களின் பலன்

लग्नेऽर्के वज्रपातः स्यात् कोशहानिश्च शीतगे ।
मृत्युर्विश्वम्भरापुत्रे दारिद्र्यं रविनन्दने ।।

जीवे धर्मादिकामाः स्युः सुतोत्पत्तिश्च भार्गवे ।
चन्द्रजे कुशलं शक्तिः जनस्यायुः प्रवर्धते ।। - Vastu pradeepa

லக்னேऽர்கே வஜ்ரபாத: ஸ்யாத் கோசஹாநிஸ்ச்ச சீதகே ।
ம்ருத்யுர்விச்வம்பராபுத்ரே தாரித்ர்யம் ரவிநந்தனே ॥

ஜீவே தர்மாதிகாமா: ஸ்யு: ஸுதோத்பத்திஸ்ச்ச பார்கவே ।
சந்த்ரஜே குசலம் சக்தி: ஜனஸ்யாயு: ப்ரவர்ததே ॥
- வாஸ்து ப்ரதீபா

**வீடு அமைக்கும் பணி தொடங்கும் லக்னத்தில்**

| | |
|---|---|
| சூரியன் இருந்தால் | இடியால் பயம் |
| சந்திரன் இருந்தால் | செல்வம் அழியும் |

| | |
|---|---|
| செவ்வாய் இருந்தால் | மரணம் |
| சனி இருந்தால் | தரித்திரம் |
| குரு இருந்தால் | தரும காரியங்கள் நடக்கும் |
| சுக்ரன் இருந்தால் | சந்ததி விருத்தி |
| புதன் இருந்தால் | சௌக்யம், பலம், ஆயுள், அபிவிருத்தி. |

**2ம் பாவத்தில் கிரஹங்கள் இருப்பதின் பலன்**

द्वितीयस्थे रवौ हानिश्चन्द्रे शत्रुक्षयो भवेत् ।
भूसुते बन्धनं प्रोक्तं ननाविघ्नाश्च भानुजे ।।

बुधे द्रविणसम्पत्तिः गुरौ धर्मसमागमः ।
यथाकामं विनोदेन भृगौ कालोव्रजेदिह ।।

த்விதீயஸ்தே ரவௌ ஹாநிஸ்ச்சந்த்ரே சத்ருக்ஷயோ பவேத் ।
பூஸுதே பந்தனம் ப்ரோக்தம் நானாவிக்நாஸ்ச்ச பாநுஜே ॥

புதே த்ரவிணஸம்பத்தி: குரௌ தர்மஸமாகம: ।
யதாகாமம் விநோதேன ப்ருகௌ காலோவ்ரஜேதிஹ ।

வீடு அமைக்கும் லக்னத்திற்கு இரண்டாமிடத்தில்

| | |
|---|---|
| சூரியன் இருந்தால் | பொருள் நஷ்டம் |
| சந்திரன் இருந்தால் | சத்ருநாசம் |
| புதன் இருந்தால் | தானிய விருத்தி |
| குரு இருந்தால் | செல்வம் பெருகும் |
| சுக்ரன் இருந்தால் | இன்பம், மகிழ்ச்சி |

மூன்றாம் பாவத்தில் கிரஹங்கள் இருப்பதின் பலன்

सौम्यग्रहास्तृतीयस्थाः पापा अपि विशेषतः ।
सिद्धिः स्यादचिरादेव यथाऽभिलषितं प्रति ।।

ஸௌம்யக்ரஹாஸ்த்ருதீயஸ்தா: பாபா அபி விசேஷத: ।
ஸித்தி: ஸ்யாதசிராதேவ யதாऽபிலஷிதம் ப்ரதி ॥

வீடு அமைக்கும் லக்னத்திற்கு மூன்றாமிடத்தில் சுபக்ரஹங்கள் இருந்தாலும், அசுபகிரஹங்கள் இருந்தாலும் மிக விரைவில் ஸர்வ காரியஸித்தி ஏற்படும்.

**4ம் பாவத்தில் கிரஹங்கள் இருப்பதின் பலன்**

चतुर्थस्थानगे जीवे पूजा सम्पद्यते क्रमात् ।
चन्द्रजे च सदा लाभः भूमिलाभश्च भार्गवे ।।

वियोगः सुहृदां भानौ मित्रभेदो धरासुते ।
बुद्धिनाशो निशानाथे महालाभोऽर्कनन्दने ।।

சதுர்யஸ்த்தாநகேஜீவே பூஜா ஸம்பத்யதே க்ரமாத் ।
சந்த்ரஜே ச ஸதா லாப: பூமிலாபஸ்ச்ச பார்கவே ॥

வியோக: ஸுஹ்ருதாம் பாநௌ மித்ரபேதோ தராஸுதே ।
புத்திநாசோ நிசாநாதே மஹாலாபோऽர்கநந்தனே ।

வீடு அமைக்கும் லக்னத்திற்கு நான்காமிடத்தில்

| | |
|---|---|
| குரு இருந்தால் | சமூக கௌரவம், புகழ் |
| புதன் இருந்தால் | லாபம் |
| சுக்ரன் இருந்தால் | பூமி லாபம் |
| சூரியன் இருந்தால் | நண்பர்கள் பகை |
| செவ்வாய் இருந்தால் | நட்பு முறிவு |
| சந்திரன் இருந்தால் | புத்தி நாசம் |
| சனி இருந்தால் | மகாலாபம் |

**5ம் பாவத்தில் கிரஹங்கள் இருப்பதின் பலன்**

पञ्चमस्थे सुराचार्ये मित्रवस्तु धनागमः ।
शुक्रे पुत्रधनप्राप्तिः हैमाभरणमिन्दुजे ।।
सुतदुःखं सदा सूर्ये शशाङ्के कलहागमः ।
भौमे कामविरोधः स्यात् शनो कामविवर्धनम् ।।

பஞ்மஸ்தே ஸூராசார்யே மித்ரவஸ்து தநாகம: ।
சுக்ரே புத்ரதநப்ராப்தி: ஹைமாபரணமிந்துஜே ॥

ஸூததுःகம் ஸதா ஸூர்யே சசாங்கே கலஹாகம: ।
பௌமே காமவிரோத: ஸ்யாத் சநௌ காமவிவர்தனம் ।

வீடு அமைக்கும் லக்னத்திற்கு ஐந்தாமிடத்தில்

| | |
|---|---|
| குரு இருந்தால் | நண்பர், செல்வம், பிற பொருள்வரவு |
| சுக்ரன் இருந்தால் | சந்ததி ஏற்படும், செல்வம் பெருகும் |
| புதன் இருந்தால் | தங்க நகைகள் லாபம் |
| சூரியன் இருந்தால் | மகன், மகள் (சந்ததி) முதலானோர்க்குத் தீமை |
| சந்திரன் இருந்தால் | கலஹம் |
| செவ்வாய் இருந்தால் | எண்ணியது நடவாது |
| சனி இருந்தால் | சுகம் கெடும் |

**6ம் பாவத்தில் கிரஹங்கள் இருப்பதின் பலன்**

षष्ठस्थानगते सूर्ये पूजा सम्पद्यते नृपात् ।
चन्द्रे पुष्टिः कुजे प्राप्तिः (लाभः) सौरे शत्रुबलक्षयः ।।

गुरौ चार्थोदयः प्रोक्तः भृगौ विद्यागमो भवेत् ।
मानज्ञानस्य कौशल्यं नक्षत्रपतिनन्दने ।।

ஷஷ்டஸ்தாநகதே ஸூர்யே பூஜா ஸம்பத்யதே ந்ருபாத் ।
சந்த்ரே புஷ்டி: குஜே ப்ராப்தி:(லாப:) ஸௌரே சத்ருபலக்ஷய:

குரௌ சார்த்தோதய: ப்ரோக்த: ப்ருகௌ வித்யாகமோ பவேத்
மானஞானஸ்ய கௌசல்யம் நக்ஷத்ரபதிநந்தநே ॥

வீடு அமைக்கும் லக்னத்திற்கு ஆறாமிடத்தில்

| | |
|---|---|
| சூரியன் இருந்தால் | அரசாங்க நன்மை |
| சந்திரன் இருந்தால் | வளம் |

| | |
|---|---|
| செவ்வாய் இருந்தால் | லாபம் |
| சனி இருந்தால் | பகைவர் பலம் குன்றும் |
| குரு இருந்தால் | செல்வம் வளம் |
| சுக்ரன் இருந்தால் | கல்வி வளர்ச்சி |
| புதன் இருந்தால் | நன்மதிப்பு, நலம். |

**7ம் பாவத்தில் கிரஹங்கள் இருப்பதின் பலன்**

लग्नात्सप्तमगे जीवे बुधे दैत्यपुरोहिते ।
गजवाजिधरित्रीणां क्रमाद् भोगं विनिर्दिशेत् ॥
भास्करे कीर्तिभङ्गः स्यात् कुजे विग्रहमादिशेत् ।
चन्द्रमन्दयुते मान्द्यं हीनाङ्गत्वं भयं तथा ॥

லக்னாத்ஸப்தமகே ஜீவே புதே தைத்யபுரோஹிதே ।
கஜவாஜிதரித்ரீணாம் க்ரமாத் போகம் விநிர்திசேத் ॥
பாஸ்கரே கீர்த்திபங்க: ஸ்யாத் குஜே விக்ரஹமாதிசேத் ।
சந்த்ரமந்தயுதே மான்த்யம் ஹீநாங்கத்வம் பயம் ததா ॥

வீடு அமைக்கும் லக்னத்திற்கு ஏழாமிடத்தில்

| | |
|---|---|
| குரு இருந்தால் | யானை லாபம் |
| புதன் இருந்தால் | குதிரை லாம் |
| சுக்ரன் இருந்தால் | பூமி லாபம் |
| சூர்யன் இருந்தால் | அபகீர்த்தி |
| செவ்வாய் இருந்தால் | கலகம் |
| சந்திரன் இருந்தால் | அங்கஹீனம் |
| சனி இருந்தால் | பயம் |

**8ம் பாவத்தில் கிரஹங்கள் இருப்பதின் பலன்**

निधनस्थे सहस्रांशौ शत्रुतो विपदस्तथा ।
हानिः शीतमयूखे च मङ्गले रविजे भयम् ॥
बुधे मानधनप्राप्तिः सुरेड्ये विजयो महान् ।
शुक्रे स्वजनतो दद्यात् सुखं पुंसां विशेषतः ॥

நிதநஸ்தே ஸஹஸ்ராம்சௌ சத்ருதோ விபதஸ்ததா ।
ஹாநி: சீதமயூரகே ச மங்கலே ரவிஜே பயம் ॥

புதே மாநதநப்ராப்தி: ஸுரேட்யே விஜயோ மஹான் ॥
சுக்ரே ஸ்வஜநதோ தத்யாத் ஸுகம் பும்ஸாம் விசேஷத: ॥

வீடு அமைக்கும் லக்னத்திற்கு எட்டாமிடத்தில்

| | |
|---|---|
| சூரியன் இருந்தால் | நஷ்டம் |
| செவ்வாய் இருந்தால் | பயம் |
| சனி இருந்தால் | பயம் |
| புதன் இருந்தால் | கௌரவம், தனலாபம் |
| குரு இருந்தால் | பெரும் வெற்றி |
| சுக்ரன் இருந்தால் | நண்பர், உறவினர் வழியாக சுகம் |

**9ம் பாவத்தில் கிரஹங்கள் இருப்பதின் பலன்**

नवमस्थानगे जीवे बुद्धिभाग्याभिवर्धनम् ।
बुधे विविधभोगाप्तिः शुक्रे मन्दोदयो भवेत् ॥

चन्द्रे धातुक्षयःप्रोक्तो धर्महानिश्च भास्करे ।
कुजेसामर्थ्यहानिः स्यात् रविजे कामदूषणम् ॥

நவமஸ்தானகே ஜீவே புத்திபாக்யாபிவர்தனம் ।
புதே விவிதபோகாப்தி: சுக்ரே மந்தோதயோ பவேத் ॥

சந்த்ரே தாதுக்ஷய:ப்ரோக்தோ தர்மஹானிஸ்ச்ச பாஸ்கரே ।
குஜேஸாமர்த்யஹானி: ஸ்யாத் ரவிஜே காமதூஷணம் ॥

வீடு அமைக்கும் லக்னத்திற்கு ஒன்பதாமிடத்தில்

| | |
|---|---|
| குரு இருந்தால் | அறிவாற்றல், பாக்ய விருத்தி |
| புதன் இருந்தால் | ஆடை, ஆபரணம் போன்ற பலவித சுகபோக லாபம் |
| சுக்ரன் இருந்தால் | மந்தமான அபிவிருத்தி |
| சந்திரன் இருந்தால் | உடலில் வீர்யக் குறைவு |

| | |
|---|---|
| சூரியன் இருந்தால் | தர்ம நாசம் |
| செவ்வாய் இருந்தால் | செயற்திறன் குறைவு |
| சனி இருந்தால் | இல்லறசுகமின்மை |

**10ம் பாவத்தில் கிரஹங்கள் இருப்பதின் பலன்**

दशमस्थानगे शुक्रे शयनाशनसिद्धयः ।
सुराचार्ये महत्सौख्यं विजयश्च तथा बुधे ।।

मार्ताण्डे धनवृद्धिश्च चन्द्रे कोशविवर्धनम् ।
भौमे बलं सदा पुंसां शनौ कीर्तिविलेपनम् ।।

தசமஸ்தானகே சுக்ரே சயநாசன ஸித்தய:।
ஸுராசார்யே மஹத்ஸௌக்யம் விஜயஸ்ச்ச ததா புதே ॥

மார்த்தாண்டே தனவ்ருத்திஸ்ச்ச சந்த்ரே கோசவிவர்தனம் ।
பௌமே பலம் ஸதா பும்ஸாம் சனௌ கீர்த்தி விலேபனம் ॥

வீடு அமைக்கும் லக்னத்திற்கு பத்தாமிடத்தில் (பாவத்தில்)

| | |
|---|---|
| சுக்ரன் இருந்தால் | சயன(படுக்கை), போஜன சுகம் |
| குரு இருந்தால் | மிகுந்த சுகம் |
| புதன் இருந்தால் | வெற்றி |
| சூரியன் இருந்தால் | செல்வ விருத்தி |
| சந்திரன் இருந்தால் | சேமிப்பு கூடும் |
| செவ்வாய் இருந்தால் | பலம் மிகும் |
| சனி இருந்தால் | கீர்த்தி |

**11ம் பாவத்தில் கிரஹங்கள் இருப்பதின் பலன்**

लाभस्थानगताः सर्वे प्रयच्छन्ति शुभं फलम् ।
व्यये सर्वे सदौदास्यं प्रदिशन्ति विशेषतः ।।

லாபஸ்தானகதா: ஸர்வே ப்ரயச்சந்தி சுபம் பலம் ।
வ்யயே ஸர்வே ஸதௌதாஸ்யம் ப்ரதிசந்தி விசேஷத: ॥

பதினோறாம் பாவம் லாபஸ்தானம் எனப்படும் என்பதால் சுபகிரஹறங்களும், அசுபகிரஹறங்களும் நல்ல பலன்களையே தரும்.

பனிரெண்டாம் விரய (செலவு) ஸ்தானம் எனப்படும். 12ம் பாவத்தில் உள்ள கிரஹங்கள் வேலையில் சோம்பல் தன்மையையும், ஊக்கமின்மையையும் தரும்.

**வீடுகள், கட்டிடங்கள் அமைப்பதற்கான நன்னாளில் முதன்முதல் வடகுபறிக்க (அஸ்திவராம்) முற்படும் பொழுது கருத்தில் கொள்ளவேண்டிய விபரம் :**

வீடு, மாளிகை, ஆலயம் முதலான கட்டிடங்கள் கட்டப்படும் இடம், நாள், நேரம், கடிகார மணி முதலான விபரங்களைக் குறித்துவைத்துக் கொள்வது மிகவும் அவசியம். பிறக்கும் குழந்தைகளின் ஜனன காலத்தைக் (தேதி, கடிகாரமணி, இடம், மாவட்டம் முதலானது) குறிப்பு எழுது வைப்பதுபோல், கட்டிடம் கட்டப்படும் தேதி, நேரம் முதலான விபரங்களும் அவசியம் குறித்துவைத்துக் கொள்ளப்பட வேண்டும். அதுமட்டுமின்றி மேற்கொள்ளப்படும் வேலைகளின் ஒவ்வொரு கட்டத்தின் (stage) விபரமும் நாள், நேரம் உள்பட குறித்துவைத்துக்கொள்வது அவசியம்.

மேலும், கட்டிட வேலையின் தொடக்கத்தில் பணியாளர், உடல், உள்ளத்தூய்மையுடன் இறைவழிபாடு செய்துகொண்டு கிழக்கு அல்லது வடக்கு முகமாக நின்று பணியைத் தொடங்கவேண்டும் என்பதும் வாஸ்து சாஸ்திரம் அறிந்த பெரியோர்களின் கருத்தாகும்.

**ஆயாதி விதிகள்** :

ஆதியந்தமில்லாத கடவுளின் படைப்பிற்குட்பட்ட ஜீவராசிகள், மரங்கள் முதலான அனைத்தின் ஜீவிதகாலம் (ஆயுட்காலம்) வரையறுக்கப்பட்டதுதான். அப்படியிருக்கையில் மனிதனால் உருவாக்கப்படும் பொருள்கள் எல்லாவற்றிற்கும் குறிப்பிட்ட ஆயுட்காலம் இருக்கவே செய்கிறது. ஆகையால் வாஸ்து வித்தை அறிந்த முன்னோர்கள் சிறிய / பெரிய

கட்டிடங்களாக இருந்தாலும், ஆலயங்களாக இருந்தாலும் அவை எல்லாவற்றையும் உயிருள்ளதாகவே கருதினர். நிலப்பகுதிகளும் அவற்றில் கட்டப்படும் கட்டிடங்களும் உயிருள்ளவை (குறிப்பிட்ட காலம்வரை நிலைபெற்றிருக்கக் கூடியவை) என்று இருப்பதால் அவற்றை இடத்திற்கேற்ப குறிப்பிட்ட வடிவத்தில் - அளவில் - முறைப்படி அமைத்தாக வேண்டியது அவசியமாகிறது. அவ்வாறு குறிப்பிட்ட விதிமுறைகளை அனுசரித்து அமைக்கப்பட்ட கட்டிடங்கள் தம்முள் வசிக்கின்ற அனைத்து மக்களுக்கும் நோயற்ற, வளமான, அமைதியுள்ள மகிழ்ச்சிகரமான வாழ்க்கையை வழங்குகின்றன. வாஸ்து விஷயத்தில் குறிப்பிட்ட விதிமுறை யாது எனில், வாஸ்து வித்தை கற்றறிந்த நூலோர்கள் இடத்திற்கு ஏற்றவாறு அமைக்கப்படவுள்ள கட்டிடம், வீடு முதலானவற்றின் நீளம், அகலம், உயரம் உட்பகுதிகள் இன்ன விதமாக இருக்கவேண்டும் என்று கண்டறிந்து கூறினர். ("ஆயாதி விதிகள்" கட்டப்படவுள்ள கட்டிடத்தின் நீளம், அகலம், சுற்றளவு ஆகிய அளவுகளைக் கொண்டுதான் தீர்மானிக்கப்படவேண்டும். மனையின் நீள, அகலம் ஆகியவற்றைக் கொண்டு தீர்மானிப்பதல்ல.)

ஆயம் (வருவாய்) வ்யயம் (செலவு. நஷ்டம்), ருக்ஷம், யோனி, வாரம், திதி ஆகிய ஆறு அம்சங்களை அனுசரித்து ஒரு கட்டிடம் அல்லது ஆலயம் அல்லது வீடு அல்லது மாளிகை ஆகியவற்றின் வயது, சிறப்பு ஆகியவை அமைகிறது. குறிப்பிட்ட நீளம், அகலம், உயரம் உள்ளதாயும், வாயில் பகுதி, உட்பகுதிகள் உள்ளதாயும் அமைக்கப்பட்ட கட்டிடங்கள் வீடுகள், ஆலயங்கள் முதலானவை பல்லாண்டுகள் சில நூற்றுக்கணக்கான ஆண்டுகள்கூட பெருமையுடனும் புகழுடனும் விளங்குவதுடன் அவற்றில் வசிக்கும் மக்களுக்கும் உயர்பதவிகள், செல்வச் சிறப்புக்கள், மகிழ்ச்சி, ஆரோக்கியம் (நோயற்ற வாழ்க்கை) முதலானவற்றை வழங்குகின்றன என்று வாஸ்து வித்யை அறிந்த முன்னோர்கள் கண்டறிந்து பிற்கால மனித சமுதாயத்தின் நலன்கருதி நூல்களில் எழுதியும் சென்றனர்.

## ஆயாதி விதிகள்

ஆயாதிவிதிகள் எனப்படுவை. ஆயம், வ்யயம், ருக்ஷம், யோனி, அம்சம், திதி, வாரம் ஆகியவையாகும். இவை கட்டிடத்தின் நீளம், அகலம், உயரம், சுற்றளவு ஆகிய அளவுகளை அடிப்படையாகக் கொண்டவையாகும்.

இந்த ஆயாதி விதிமுறைகளை அனுசரித்து அளவுப்படி அமைக்கப்பட்ட வீடுகள், கட்டிடங்கள் பல்லாண்டுகள் சிறப்புற்று விளங்குவதுடன் அத்தகைய வீடுகளில், கட்டிடங்களில் வசிக்கின்ற அனைவருக்கும் வளமான, ஆரோக்யமுள்ள மகிழ்ச்சிமிக்க நல்வாழ்கையையும் வழங்கு கின்றன என்று வாஸ்து சம்பந்தமான நூல்களில் கூறப்பட்டுள்ளது.

இந்த ஆயாதி விதகள்பற்றி "மயமதம்", "மானஸாரம்", அகஸ்தியரின் "ஸகலாதிகாரம்" முதலான நூல்களில் கூறப்பட்டு இருக்கிறது. ஆனால் ஒவ்வொரு நூலிலும் ஒவ்வொரு விதமாகக் கூறப்படுகிறது. முன்காலத்தில் முழம், சாண், ஒட்டை, தண்டம், அளவுகோல் போன்ற அளவைகள் நடைமுறையில் இருந்தன. விஞ்ஞானம் வளர்ந்துள்ள இந்த நாட்களில் அடி, சென்டிமீட்டர், மீட்டர் போன்ற அளவு முறைகள் நடைமுறையில் வந்துள்ளன.

1. ஆயம்-ஆதாயம், வளர்ச்சி என்று பொருள்.
2. வய்யயம்-செலவு, குறைபாடு.
3. ருக்ஷம்-நக்ஷத்திரம், அச்வினி முதலான 27 நக்ஷத்திரங்கள்.
4. யோனி-திசைகள்.
5. திதி - சந்திரனின் கதியை (Movement) அனுசரித்த நாள் கணக்கு. அமாவாசை கழிந்த மறுநாள் முதல் தொடங்கும் வளர்பிறை 15 நாட்களும், பௌர்ணமி கழிந்த மறுநாள் தொடங்கும் தேய்பிறை 15 நாட்களும் திதி எனப்படும்.
6. வாரம் - ஞாயிறு முதலான கிழமைகள்.

### 1. ஆயம்

व्यासायाम समूहे
    वसुनिधिगुणिते दिनेशधर्म हृते
आयं व्ययं अवशिष्टं . . . . . . . . ||

வ்யாஸாயாம ஸமூஹே
    வஸுநிதிகுணிதே திநேசதர்ம ஹ்ருதே
ஆயம் வ்யயம் அவசிஷ்டம் . . . . . . . . ||

அமைக்கப்படவுள்ள கட்டிடத்தின் (மனையின் நீள, அகலமல்ல) நீள-அகலத்தை 8ஆல் பெருக்கி 12ஆல் வகுக்க மிச்சமாகும் எண் **ஆயம்** எனப்படும்.

$$\frac{\text{நீளம் + அகலம்} \times 8}{12} = \text{மிச்சம் ஆயம்}$$

### 2. வ்யயம்

அமைக்கப்படவுள்ள கட்டிடத்தின் நீளம் + அகலத்தை 9ஆல் பெருக்கி, 10ஆல் வகுக்க மிச்சமாகும் எண் **வ்யயம்** ஆகும். மிச்சமில்லையானால் நல்லதே. அதற்கு ஏற்றவாறே (ஆயாதி விதிகளுக்கேற்றவாறு) கட்டிடத்தின் நீள, அகலத்தை அதிகப்படுத்தலாம் அல்லது குறைக்கலாம். ஆயத்தைவிட வ்யயம் அதிகமானால் அந்தக் கட்டிடம் அல்லது வீடு சிறப்பாக இருப்பதில்லை.

$$\frac{\text{நீளம் + அகலம்} \times 9}{10} = \text{மிச்சம் வ்யயம்}$$

### ருக்ஷம் (நக்ஷத்திரம்)

पुनरपि वसुभिर्गुणिते
    त्रिनवाहृत्या फलं शिष्टं नक्षत्रम् ||

புனரபி வஸுபிர்குணிதே
    த்ரிநவாஹ்ருத்யா பலம் சிஷ்டம் நக்ஷத்ரம் ||

நீள, அகலத்தை 8ஆல் பெருக்கி, 27ஆல் வகுத்து மிச்சப்படும் எண் நக்ஷத்திரம் ஆகும். கட்டிடத்தின் யஜமானருடைய ஜன்ம நக்ஷத்திரம், நாம நக்ஷத்திரம் இவற்றிற்குப் பொருத்தமுள்ள நக்ஷத்திரமாக ஆயாதி விதி மூலம் கிடைத்த நக்ஷத்திரம் இருப்பின் நல்லது.

$$\frac{\text{நீளம் + அகலம் x 8}}{27} = \text{மிச்சம் ருக்ஷம் (நக்ஷத்திரம்)}$$

நக்ஷத்திரம் தொடர்பாக ஸகலாதிகாரம் நூலில் கூறப்பட்டுள்ள கருத்துக்களும் கூறப்படவுள்ளன. அவைகளும் பின்பற்றத் தக்கவையாகும்.

**4. யோனி**

रामघ्नेऽष्टापहृच्छेषं योनिः ।

ராமக்நேऽஷ்டாபஹ்ருச்சேஷம் யோனி:।

நீள, அகலத்தை மூன்றால் பெருக்கி எட்டால் வகுக்க மிச்சப்படும் எண் யோனியாகும்.

$$\frac{\text{நீளம் + அகலம் x 3}}{8} = \text{மிச்சம் யோனி.}$$

ध्वजधूम सिह्मश्व
    वृषखर गजकाकाश्च योनिगणाः ॥

த்வஜதூம ஸிஹ்மாச்வ
    வ்ருஷகர கஜகாகாஸ்ச்ச யோநிகணா:।.

| | |
|---|---|
| த்வஜம் | கிழக்கு |
| தூம | தென்கிழக்கு |
| ஸிம்ஹ | தெற்கு |
| ச்வ | தென்மேற்கு |
| வ்ருஷ | மேற்கு |
| க்கர | வடமேற்கு |
| கஜ | வடக்கு |
| காக | வடகிழக்கு |

இவற்றுள் 1, 3, 5, 7 மிச்சமாக வந்தால் நல்லது. இதிலிருந்து முன்னோர்கள் உயர்வானதெனக் கடைப்பிடித்து வந்த முக்கியமான கருத்தொன்று அறியப்படலாகிறது. முன்னோர்கள் கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு திசைகளை நோக்கி அமைக்கப்படும் வீடுகளையே சிறந்ததெனக் கருதினார்கள் என்றும், தென்கிழக்கு, தென்மேற்கு, வடமேற்கு, வடகிழக்குக் கோணங்களை நோக்கியவாறு அமைக்கப்படும் கட்டிடங்களைச் சிறந்தவை எனக் கருதவில்லை என்றும் அறியப்படுகிறது.

### 5. வாரம் (கிழமை)

அமைக்கப்படவுள்ள உயரம் அல்லது சுற்றளவை 9ஆல் பெருக்கு 7ஆல் வகுக்க மிச்சமாக வரும் எண் கிழமையைக் குறிப்பதாகும்.

$$\frac{\text{உயரம் அல்லது சுற்றளவு} \times 9}{7} = \text{மிச்சம்} = \text{வாரம் (கிழமை)}$$

அவ்வாறு மிச்சப்படும் எண் 1, 3, 7 எண்களுக்கு உரிய ஞாயறு, செவ்வாய், சனிக்கிழமைகளைத் தவிர பிற நாட்கள் (கிழமைகள்) சுபம்.

### 6. திதி

சுற்றளவை 9ஆல் பெருக்கி 30ஆல் வகுத்தால் மிச்சம் வருவது 1, 4, 8, 11, 14, 15 ஆகிய எண்களுக்குரிய திதிகள் தவிர பிற திதிகள் சுபம். மேலே குறிப்பிட்ட எண்கள் வளர்பிறை நாட்களைக் குறிக்கும். இவ்விதமே தேய்பிறையிலும் 1, 4, 8, 11, 14, 15 எண்களுக்குரிய திதிகள் தவிர பிற திதிகள் அதாவது பிரதமை, சதுர்த்தி, அஷ்டமீ, ஏகாதசி, சதுர்தசி, பௌர்ணமி அல்லது அமாவாசை தவிர மற்ற திதிகள் நன்மை பயக்கவையாம்.

உதாரணமாக ஒருவர் 46 அடி நீளம் 30 அடி அகலம், 13 அடி உயரம் உள்ள வீடு கட்டுவதாக வைத்துக்கொண்டால்

ஆயாதி விதிகளின்படி அந்தக் கட்டிடம் அல்லது வீடு அனுகூலமாகச் சீரும் சிறப்பும் மிக்கதாக இருக்குமா என்பதைக் காண்போம்.

1. **ஆயம்** $\frac{L\ (\text{நீளம்}) + B\ (\text{அகலம்}) \times 8}{12} =$

என்ற விதிப்படி பார்த்தால் $46 + 30 = \frac{76 \times 8}{12} =$

$= \frac{608}{12} = 50$ மிச்சம் 8 ஆயம்

2. **வ்யயம்** $\frac{L\ 46 + B\ 30 \times 9}{10} =$ $\frac{76 \times 9}{10}$ = மிச்சம் 22

$\frac{684}{10} = 68$ மிச்சம் 4 - உத்தமம்

3. **ருக்ஷம் (நக்ஷத்திரம்)** $\frac{46 + 30 \times 8}{27} =$

$\frac{76 \times 8}{27} = 22$ மிச்சம் 14

4. **யோனி** $\frac{46 + 30 \times 3}{8} =$

$\frac{76 \times 3}{8} = \frac{228}{8} = 28$ = மிச்சம் 4. உத்தமம்

5. **வாரம்** உயரம் $\frac{13 \times 9}{7} = 117 = 16.$ மிச்சம் 5 உத்தமம்

6. **திதி** $\frac{\text{சுற்றளவு} \times 9}{30} = \frac{46 + 46 + 30 + 30 \times 9}{30}$

$\frac{1368}{30}$ = மிச்சம் 18. உத்தமம்

நீளம் 46 அடி, அகலம் 13 உள்ள வீட்டின் தொடர்பான ஆயாதி விதிகள்: ஆயம் 8, வ்யயம் 4, நக்ஷத்திரம் 14, யோனி 4, வாரம் 5, திதி 18. யாவும் உயர்வாக

அமைந்துள்ளதால் கூறப்பட்ட அளவுள்ளபடி அமைக்கப்படும் வீடு நன்மை தருவதாக சீரும் சிறப்பும் மிக்கதாக விளங்கும் என்பதில் ஐயமில்லை.

அகஸ்தியர் வகுத்த **ஸகலாதிகாரம்** நூலில் இந்த ஆயாதி விதிகள் பலவிதமாகக் கூறப்படுகின்றன.

**ஆயம், வியயம் முதலான யாவும் மூன்று விதமாகக் கணக்கிடும் முறை கூறப்படுகிறது.**

**ஆயம்**

अष्ट षट् त्रिगुणं हन्यात् भानुरुद्रदशैस्तु तत् ।
शेषमायं त्रिधा प्रोक्तं क्रमेण प्रथमादि वै ।।

அஷ்ட ஷட் த்ரிகுணம் ஹன்யாத் பானுருத்ரதசைஸ்து தத் ।
சேஷமாயம் த்ரிதா ப்ரோக்தம் க்ரமேண ப்ரதமாதி வை ॥

அளவைக் குறிக்கும் எண்ணை 8, 6 அல்லது 3ஆல் பெருக்கி, 12, 11, 10 ஆல் வகுத்து வரும் மிச்சம் ஆயமாகும்.

**வ்யயம்**

पङ्क्तिनन्दाष्टगुणिते सप्तर्तुदशभिर्व्ययम् ।।

பங்க்திநந்தாஷ்டகுணிதே ஸப்தர்துதசபிர்வ்யயம் ।

அளவைக் குறிக்கும் எண்ணை 10 அல்லது 9 அல்லது 8ஆல் பெருக்கி, 7, 6, 10 ஆல் வகுக்க மிச்சப்படுவது வ்யயமாகும்.

**வாரம்**

वर्धयन्नवाष्टरसकैः हन्याद्वारं इनादिभिः ।

வர்த்தயன்னவாஷ்டரஸகை: ஹன்யாத்வாரம் இனாதிபி: ।

அளவைக் குறிக்கும் எண்ணை 9, 8, அல்லது 6ஆல் பெருக்கி, 7ஆல் வகுக்க மிச்சப்படுவது வாரம் கிழமையாகும். (வாரம் என்பதற்கு நாள் என்றே பொருள். ஏழு நாட்களின தொகுதியல்ல.)

**நக்ஷத்திரம்**

रसाष्टदशभिर्गुण्येत् सप्तविंशद्धृते दिनम् ।।

ரஸாஷ்டதசபிர்குண்யேத் ஸப்தவிம்சத்த்ருதே தினம் ।

அளவைக் குறிக்கும் எண்ணை 6, 8 அல்லது 10ஆல் பெருக்கி, 27ஆல் வகுக்க மூன்று வகையாக தினம் எனும் நக்ஷத்திரம் கிடைக்கும்.

**திதி**

नवाष्टगुणिते तिथये त्रिंशताहरेत् ।।

நவாஷ்டகுணிதே திதயே த்ரிம்சதாஹரேத் ।

9 அல்லது 8ஆல் பெருக்கி, 30ஆல் வகுக்க இருவகையான திதி கிடைக்கும்

**யோனி**

वृद्धो गुणात् हतोऽष्टाभिः योनिषु ध्वजमादिभिः ।।

வ்ருத்தோ குணாத் ஹதோऽஷ்டாபி: யோநிஷு த்வஜமாதிபி: ।

3ஆல் பெருக்கி, 8ஆல் வகுக்க த்வஜம் முதலான யோனி கிடைக்கும்..

**अथातोऽन्य प्रकारेण आयादि विधिरुच्यते ।।**

அதாதோऽந்ய ப்ரகாரேண ஆயாதி விதிருச்யதே ।

**வேறு வகையாகவும் ஆயாதிகளைத் தீர்மானிக்கலாம்.**

**ஆயம்**

वसुनन्दरसैर्वृद्धं तथा द्वादशभिर्हरेत् ।
आयं त्रिधा समाख्यातं भवेत् तत् क्रमशो विदुः ।।

வஸுநந்தரஸைர்வ்ருத்தம் ததா த்வாதசபிர்ஹரேத் ।
ஆயம் த்ரிதா ஸமாக்யாதம் பவேத் தத் க்ரமசோ விது: ॥

அளவைக் குறிக்கும் எண்ணை 8, 9, 6ஆல் பெருக்கி, 12ஆல் வகுக்க வரும் மிச்சம் 3 வகையாகக் கிடைக்கும் ஆயமாகும்.

**வ்யயம்**

नवाष्टवेदवृद्धं तु दशभिः हारयेत् व्ययम् ।।

நவாஷ்டவேத வ்ருத்தம் து தசபி: ஹாரயேத் வ்யயம் ।

ஒன்பது, 8, 4ஆல் பெருக்கி வரும் தொகையை 10 ஆல் வகுக்க மூன்று வகையிலான வ்யயம் கிடைக்கும்.

**வாரம்**

नवाष्टर्तुगुणं सप्तहारात् वारस्त्रिधा भवेत् ।

நவாஷ்டர்துகுணம் ஸப்தஹாராத் வாரஸ்த்ரிதா பவேத்: ।

ஒன்பது, எட்டு,, ஆறால் பெருக்கி, 7ஆல் வகுக்க வாரம் (நாள்) கிடைக்கும்.

**நக்ஷத்திரம்**

अष्टपङ्क्त्यर्कसंवृद्धं हृते ऋक्षैः दिनं भवेत् ।।

அஷ்டபங்க்த்யர்கஸம்வ்ருத்தம் ஹ்ருதே ருக்ஷை: தினம் பவேத் ।

எட்டு, பத்து, பனிரெண்டால் பெருக்கி, 27ஆல் வகுத்துக் கிடைக்கும் மிச்சம் மூன்றுவகை தினம் எனும் நக்ஷத்திரமாகும்.

**திதி** : 9 பெக்கி, 30ஆல் வகுக்க மிச்சம் கிடைப்பது திதியாகும்

**யோனி** : 3ஆல் பெருக்கி, 8ஆல் வகுக்கக் கிடைக்கும் மிச்சம் யோனியாகும்..

**अथवाऽन्य प्रकारेण आयादिविधिरुच्यते ।।**

அதவாऽந்ய ப்ரகாரேண ஆயாதி விதிருச்யதே ।

**இன்னொரு வகையிலும் ஆயாதிகளைத் தீர்மானிக்கலாம்.**

नव नागरसैर्वृद्धं रुद्रभानुदशैर्हरेत् ।

शेषमायं त्रिधाऽऽख्यातम् . . . . . .

நவ நாகரஸைர்வ்ருத்தம் ருத்ரபானுதைசர்ஹரேத் ।

சேஷம் ஆயம் த்ரிதா ஆக்யாதம் . . . . .

ஒன்பது, எட்டு, ஆறால் பெருக்கி 11, 12, 10ஆல் வகுக்க மிச்சம் மூன்றுவகை ஆயம் ஆகும்.

**வ்யயம்**

. . . . . . . . . . वेदनागरसैर्दशैः .

वार्धितैस्तु व्ययं हन्यात् पञ्चषड् वसुसप्तभिः ।।

. . . . . . . . . . . . . . . . . . . . . வேதநாகரஸைர்தசை: ।
வார்திதைஸ்து வ்யயம் ஹன்யாத் பஞ்சஷட் வஸுஸப்தபி: ।

4, 8, 6, 10ஆல் பெருக்கி, 5, 6, 8, 7ஆல் வகுக்கக் கிடைக்கும் மிச்சம் நான்குவகை வ்யயமாகும்.

*முக்கிய குறிப்பு :*

आयाधिकं व्ययं क्षीणं तन्मानं शुभदं स्मृतम् ।

व्ययाधिकसमं यत्तत् सर्वसम्पत्क्षयो भवेत् ।।

ஆயாதிகம் வ்யயம் க்ஷீணம் தன்மானம் சுபதம் ஸ்ம்ருதம் ।
வ்யயாதிகஸமம் யத்தத் ஸர்வஸம்பத்க்ஷயோ பவேத் ॥

ஆயம் அதிகமாகவும், வ்யயம் குறைவாகவும் அளவு அமையப்பெற்றால் சுபம் என்று கருதப்படுகிறது. வ்யயம் அதிகமாகவும் ஆயம் குறைவாகவும் அல்லது இரண்டும் சமமாக இருப்பின் ஸம்பத்தைக் குறைக்கும்.

**வாரம்**

वर्धिताष्टरसैर्नन्दैः हरेत् सप्तेन वारकम् ।

வர்திதாஷ்டரஸைர்ந்தை: ஹரேத் ஸப்தேந வாரகம்

எட்டு, ஆறு, ஒன்பதால் பெருக்கி, 7ஆல் வகுத்த மிச்சம் மூன்று வகையாயின் வாரம் கிடைக்கும்.

**நக்ஷத்திரம்**

दशभान्चष्टभिर्वृद्धं क्षयेत् ऋक्षेण तद्दिनम् ।।

தசபாந்வஷ்டபிர்வ்ருத்தம் க்ஷயேத் ருக்ஷேண தத்தினம் ।

பத்து, பனிரெண்டு, எட்டால் பெருக்கி, 27ஆல் வகுத்து வந்த மிச்சம் மூன்றுவகை நக்ஷத்திரமாகும்.

நக்ஷத்திரம் பற்றி

नृप कर्तुश्चवास्तूनां जन्मनामर्क्षमारभेत् ।
तत्मानजातनक्षत्रावसानं गण्यते बुधैः ।।
जन्मनामयुतं श्रेष्ठं जन्मभं मध्यमं भवेत् ।
अधमं नामनक्षत्रं . . . . . . . . . . . ।।

ந்ருப கர்துஸ்ச்சவாஸ்தூநாம் ஜந்மநாமர்க்ஷமாரபேத் ।
தத்மாநஜாதநக்ஷத்ராவஸாநம் கண்யதே புத: ।।
ஜந்மநாமயுதம் ச்ரேஷ்டம் ஜந்மபம் மத்யமம் பவேத் ।
அதமம் நாமநக்ஷத்ரம் . . . . . . . . . . . ।।

கட்டிடம் அமைப்பவருடைய ஜன்ம நக்ஷத்திரம் அல்லது நாம நக்ஷத்திரம் முதற்கொண்டு, கட்டிடத்தின் அளவினால் கிடைக்கும் நக்ஷத்திரம் வரையில் எண்ண வேண்டும். ஜன்ம நக்ஷத்திரம், நாமநக்ஷத்திரம் இரண்டில் இருந்தும் எண்ணி சுபமாக அமைந்தால் உத்தமம். ஜன்ம நக்ஷத்திலிருந்து எண்ணி அதுமட்டும் சுபமாக வந்தால் மத்யமம். நாமநக்ஷத்திலிருந்து எண்ணி அதுமட்டும் சுபமாக வந்தால் அதமம்.

இப்படி எண்ணிக் கிடைக்கும் எண் ஒன்றானால் ஜன்மம் என்று பெயர். இரண்டானால் ஸமபத்து, மூன்றானால் விபத்து, நான்கானால் க்ஷேமம், ஐந்தானால் ப்ரத்யரம், ஆறானால் ஸாதகம், ஏழானால் வதம், எட்டானால் மைத்ரம், ஒன்பதானால் பரமமைத்ரம். ஒன்பதைத் தாண்டினால் மறுபடி 1, 2, 3 என்று 9 வரையில் எண்ணி பலனைத் தெரிந்துகொள்ள வேண்டும். இவ்விதம் மூன்று முறை செய்யலாம்.

**நக்ஷத்திரம் பற்றி** : ஜன்ம நக்ஷத்திரம், நாமநக்ஷத்திரம் அளவினால் கிடைத்த நக்ஷத்திரம் ஆகியவை மூன்றும் ஒரே நக்ஷத்திரமானால் பூசம், மூலம், மகம், ஆயில்யம், அவிட்டம்,

மிருகசீர்ஷம், சித்திரை இவை ஒரே நக்ஷத்திரமானால் விலக்கத்தக்கது இவ்வாறு நக்ஷத்திர சோதனை (பரீக்ஷை) செய்யவேண்டும்.

"காலவிதானம்" எனும் நூலில் வாஸ்து கர்மவிதி பற்றிக் கூறுங்கால் மிருகசீர்ஷம் - சித்திரை - அவிட்டம் இம்மூன்றும் அசுபமாகக் கூறப்படவில்லை.

முன்னோர்கள் வாஸ்து சாஸ்திர நூல்களில் எத்தகைய மனையை வீடு அமைக்கப் பயன்படுத்தவேண்டும், வீடு எவ்வாறு அமைக்கப்படவேண்டும், வீட்டின் உட்பகுதிகளில் எந்த உபயோகத்திற்கான அறைகள் அமைக்கப்படவேண்டும் என்று விளக்கமாகக் கூறியுள்ளார்கள்.

**விலக்கத்தக்க வீட்டு மனைகள்**

வீடு கட்டுவதற்கென வாங்கப்பட்ட அல்லது தேர்வு செய்யப்பட்ட மனை சமகோண சதுரமாக (Rectangular), சமசதுரமாக (Square) அமைந்துவிட்டால் அந்த மனையை வாங்கிய சொந்தக்காரர் அதிருஷ்டசாலி என்றே சொல்ல வேண்டும். ஆனால் எல்லா இடத்திலும் சதுரமான மனைகள் கிடைத்துவிடுவதில்லை. ஏதோ ஒரு பக்கத்தில் அல்லது கோணத்தில் சற்று வளைந்தும், நீண்டும், குறுகியும், குறைந்தும் அமைந்துவிடுவதுண்டு. அவ்வாறு அமைந்துள்ள மனைகள் கீழே இனி கூறப்படும் விதத்தில் அமையுமானால் அதன் பலன்கள் அவ்வாறான மனைகளின் சாதக பாதகங்கள் தரப்படுகின்றன.

1. **சமசதுரமான மனை** : இம்மாதிரியான மனை அமைந்திடில் அது செல்வம், நோயற்ற நீண்ட ஆயுளை அளிப்பதாக இருக்கும் என்பதால் இம்மாதிரியான மனையில் வாஸ்து நூல்களில் கூறப்பட்டவாறு வாயிற்பகுதிகளையும், உட்புற அறைகளும் அமைக்கப்படின் மிகவும் உயர்வான பயன்களை அளிப்பதாக இருக்கும்.

படங்கள் 2, 3ல் காட்டப்பட்டுள்ளபடி மனை வடகிழக்கு மூலை ஒழுங்கில்லாமல் குறைபட்டிருந்தால் வடகிழக்குமூலை வளைந்து அல்லது குறைபட்டதாக இருந்தால் அம்மாதிரியான மனையில் வீடு கட்டுவோர் நன்மை பெறுவதில்லை.

படம் 4ல் காண்பித்துள்ளபடி மனையின் வடகிழக்கு மூலை சற்று நீண்டதாக இருந்தால் அத்தகைய மனைகள் வாங்கலாம். நன்மை உண்டு.

படம் 5ல் காண்பித்துள்ளதுபோல் மனையின் தென்மேற்கு மூலை சற்று நீண்டதாக இருந்தால் நன்மை தருவதில்லை.

படம் 6ல் காண்பித்துள்ளதுபோல் மனையின் வடமேற்கு மூலை நீண்டதாக இருந்தால் அம்மனையில் அமைக்கப்படும் வீடும் நன்மை தருவதாக இருப்பதில்லை.

படம் 7A-ல் உள்ள மனை மேடாக இருந்து மழை பெய்தால், பக்கத்தில் உள்ள மனையில் உள்ள மழைநீர் (7A-ல் இருந்து 7B- மனையில்) வந்து விழுமானால் படம் 7-B மனை சதுரமாக அமைந்திருந்தாலும் நன்மை பயக்கக் கூடியதல்ல. இதேபோன்றே வீதியில் பெய்த மழை நீர் ஓடிவந்து மனையில், தாழ்வாகவுள்ள மனையிலும் தாழ்வான மனையில் கட்டப்பட்ட வீட்டிலும் வந்து சேருமாகில் அம்மனையும் அந்த மனையில் கட்டப்பட்ட வீடும் விருத்திக்கு வருவதில்லை. அத்தகைய வீட்டில் வசிப்பவர்கள் பலவித நோய்களுக்கு இலக்காக நேரிடும் என்பதால் வீதிக்குத் தாழ்வான இடத்தைத் தேர்வு செய்யலாகாது. தாழ்வான அத்தகைய மனையில் வீதியின் மழைநீர் உட்புகும் விதத்தில் வீடு கட்டவும் கூடாது. மனைகள் ஒரு கோணத்தில் கூடியும் ஒரு கோணத்தில் வளைந்தும் இருப்பின் சதுரமாக நான்கு கோணங்களும் சமமாக உள்ளவாறு படத்தில் காட்டப்பட்டது போல் சீர் செய்துகொள்ளலாம்.

வீடுகளை அமைக்கும் விஷயத்தில் பின்வரும் விதிமுறைகளைக் கருத்தில் கொள்ளவேண்டும். தெரு அல்லது வீதியின் ஒருபுறத்தில் திறந்தவெளி இருந்தால் அந்த திறந்த வெளியை நோக்கியவாறு வீடு அமைத்தல் கூடாது. அதுபோலவே, எதிர்புறம் கோபுரம் இருந்தலும் கூடாது. மேடுபள்ளம் உள்ள ஸ்தலத்தில் வீடு கட்டுவதும் கூடாது. சமன்படுத்தப்பட்ட ஸ்தலத்தில்தான் வீடு கட்டப்படவேண்டும். மேலும், பக்கத்தில் மேல்மாடி அமைக்கப்பட்ட வீடு இல்லையானால் பக்கத்து வீடுகளுக்கு ஒவ்வாத விதத்தில் ஒரு வீட்டை மட்டும் உயர்த்தி மாடி வீடாகக் கட்டுவதும் கூடாது. அக்கம்பக்கத்தில் உயரமுள்ள மாடி வீடுகள் இருந்தால் அவற்றை அனுசரித்து மாடிவீடு கட்டலாம். அன்னியில் ஒரே அளவினதாகப் பக்கத்து வீடுகள் ஒரே அளவினதாக இருக்கும்பொழுது அவற்றை அனுசரித்துத்தான் வீடு கட்டுவோர் தம் வீட்டைக் கட்டவேண்டும்.

தம் மனம் விரும்பியபடி பல சிறிய வீடுகளுக்கு நடுவில் அதிக உயரமுள்ள பல மாடிகள் உள்ளதான வீட்டை அமைத்தலும் கூடாது. மேலும், சுடுகாட்டிற்கு அருகில் சுடுகாட்டுப்புகை வீட்டினுள் பரவும் விதத்தித்ல வீட்டை அமைக்கக்கூடாது. பொதுவாக கிராமம் அல்லது நகரத்தின் வடகிழக்கு மூலையில் அல்லது வடதிசையில் அல்லது தென்திசையில் சுடுகாடு இருத்தல் வேண்டும். அதுவும் ஆற்றின் கரையில் அல்லது பெரிய குளத்தின் கரையில் இருக்கும் விதத்தில் சுடுகாடு/இடுகாட்டிற்கான இடத்தை ஒதுக்கவேண்டும் என்பதால் வீடு அமைப்பவர்கள் எவ்விதத்திலும் சுடுகாட்டுப் புகை வீட்டில் படர்ந்துவிடாதபடி வீட்டை அமைத்தல் வேண்டும். மேலும், பல மரங்கள் அடர்த்தியாகவுள்ள தோப்பின் இடையிலும் குடியிருப்பு வீடு அமைத்தலைத் தவிர்க்கவேண்டும்.

கரையான் புற்றுக்கள், பாம்புப் புற்றுக்கள் அருகில் இல்லாதபடிக்கும் குடியிருப்பு வீடு கட்டுகிறவர்கள் கவனமுடன் செயல்படவேண்டும், இதுபற்றி முன்னாலேயும் கூறப்பட்டுள்ளது. தவிரவும் அங்காடிகள், மார்க்கெட்டுகள்,

விளையாட்டு மைதானங்கள், பூங்காக்கள் அருகில் இருக்கும் விதமாக வீட்டைக் கட்டவேண்டும். வீடுகள் கோயில்களுக்கு மிக அருகில் கட்டப்படுவதும் உகந்ததல்ல.

**விச்வகர்ம வாஸ்து சாஸ்திர நூலில் கூறப்பட்டவாறு கிராமப்புற வீடுகளின் அமைப்பு இருக்கவேண்டிய விதம்பற்றி**

மாறுபட்ட மாநிலங்களின் தட்பவெப்ப நிலைகளைக் கருத்தில் கொண்டு வெவ்வேறு மாநிலங்களில் உள்ள கிராமப்புற வீடுகளும் அமைக்கப்பட வேண்டியதாகிறது. எனவே, கிராமப்புற விடுகளின் அமைப்பு ஒரேமாதிரியாக இருப்பதற்கில்லை. வீடுகள் சிறு கிராமங்களிலாகட்டும், பெரிய கிராமங்களிலாகட்டும், நகரங்களிலாகட்டும் கிராம அமைப்பு, கிராமத்திலுள்ள தெரு அமைப்பு, நகர அமைப்பு, நகரங்களில் உள்ள வீதிகளின் அமைப்பு ஆகியவற்றிற்கு ஏற்றவாறு முக்கியமாக வீடுகள் சரியான கிழக்கு திசை நோக்கியும், தெற்கு திசை நோக்கியும், மேற்கு திசை நோக்கியும், வடக்கு திசை நோக்கியதாகவும் இருந்தாக வேண்டியது அவசியம். வடகிழக்கு, தென்கிழக்கு, தென்மேற்கு, வடமேற்கு திசைகளை (கோண திசைகளை) நோக்கியவாறு இருத்தல் கூடாது. (அநேகமாக அவ்வாறு இருக்காது.)

प्राङ्मुखं वोत्तरमुखं पश्चिमास्यं स्थलोचितम् ।
दक्षिणाननयुग्वापि पूर्ववेदिसमन्वितम् ।।

ப்ராங்முகம் வோத்தரமுகம் பச்சிமாஸ்யம் ஸ்தலோசிதம் ।
தக்ஷிணாநநயுக்வாபி பூர்வவேதிஸமந்விதம் ॥

விச்வ வாஸ்து சாஸ்திரம் அத் 51 - 4 / 5

வீட்டின் பிரதான வாசலை அடுத்துள்ள பகுதி ரேழி எனப்படும் "தேஹலீ"யாகும். அதனை அடுத்து முதல் கட்டுமானப் பகுதி (முதல் கட்டு) ஆகும். பிரதான வாசலை அடுத்துள்ள பகுதியில் வலது/இடது இரு பக்கங்களிலும் தாழ்வாரம் அமைக்கப்பட்டதாக இருத்தல்வேண்டும். இருபக்கங்ளிலும் தாழ்வாரம் அமைப்பதில் ஒரு புறத்தில் நீளம் சற்று அதிகமாக, மறுபுறத்தில் நீளம் குறைவானதாக

அல்லது இருபக்கங்களிலும் ஒரே நீளமுள்ளதாகவோ இருக்கலாம். ஆனால் அதன் அகலம் மாறுபடாததாக இருக்கலாம். இருபுறமும் உள்ள தாழ்வாரங்களும் ஒரே அளவினதாக அகலம் உள்ளதாக இருப்பின் அந்த அமைப்பிற்கு ஏற்ற விதத்திலும் பிரதான வாயில் பகுதியையும் அதனை அடுத்துள்ள ரேழியை அடுத்துள்ள வழியும் அமைக்கப்படவேண்டியதாக இருக்கும்.

இவ்வாறு அமைக்கப்பட்ட தாழ்வாரத்தின் நீளம் மாறுபடலாம். அகலம் சமமாக இருக்கும் தமிழ்நாட்டில் உள்ள கிராமங்களிலும் அமைக்கப்படும் வீடுகளில் பிரதான வாசல் பகுதிக்கு (நிலைவாசல்) வெளியில் "முதல்கட்டு"ப் பகுதிக்கு வெளியில் திண்ணைகள் இருபுறத்திலும் அமைக்கப் படுவதுண்டு. வங்கதேசம், கோசலதேசம் ஆகிய தேசங்களில் மட்டும் தமிழ்நாட்டில் உள்ளது போன்ற வாயிற்புறத் திண்ணைகளின் அமைப்பு உண்டு. இத்திண்ணைப் பகுதிகள் அமைக்கப்படுவதன் முக்கிய நோக்கம் யாதெனில் எந்த மதத்தவராயினும், இரவாயினும் பகலாயினும் அந்தத் திண்ணையில் தங்கலாம். அவ்வாறு தங்குவபர்களுக்காகவே, முன்பின் தெரியாத இந்த இடத்தில் "எங்குபோய் தங்குவது" என்ற கவலை அந்த யாத்ரிகருக்கு ஏற்படாதவாறு யாருடைய (வீட்டின் சொந்தக்காரருடையவும்) அனுமதியும் பெறாமலும் தம் சொந்த இடம்போல் பாவித்து ஆபாசப்படுத்தாமல் தாற்காலிகமாகத் தங்கிவிட்டுச் செல்வதற்கென்றே அமைக்கப் படுவதாகும். அதிக மழை, காற்று உள்ள காலங்களிலும், வெள்ளம் ஏற்படும் காலங்களிலும், தாழ்வான பகுதிகளில் வசிக்கும் கிராமத்தினர் மழை நின்று வெள்ளம் வடியும் வரையில் தாற்காலிகமாகத் தங்குவதற்காகவே அமைக்கப்படு வதாகும். (ஆனால் வீட்டின் சொந்தக்காரர் சிலர் யாரும் தங்குவதற்கு அனுமதிப்பதில்லை என்பது அவர்கள் வீட்டின் வெளியில் திண்ணைப்பகுதி அமைக்கப்படுவதின் சரியான பொருளை உணராதவராக இருக்கலாம். அல்லது சுயநலம் மிகுந்த கஞ்சப்பிரபுவாக இருக்கலாம் என்பதே.) திண்ணையில் இரட்டித்த எண்ணுள்ள தூண்கள் அமைக்கப்படவேண்டும்.




1. நுழைவாசல்
2. தாழ்வாரம்
3. திண்ணை
4. நிலைவாசல்
5. ரேழி (தேஹலீ)
6. தாழ்வாரம்
7. உள்கூடம்
8. அலுவலக அறை
9. பொக்கிஷ அறை
10. முதல் கட்டு முற்றம்
11. 2ம் கட்டு
12. சமையல்கட்டு
13. தான்ய கிடங்கு
14. 3ம் கட்டு திண்ணை
15. 3ம் கட்டு முற்றம்

15 A. பசு கட்டுமிடம்

16. 4ம் கட்டு திண்ணை
17 4ம் கட்டு முற்றம்
18. கால்நடை கொட்டில்
19. ஆழ்கிணறு குழாய்
20. கழிவறை மற்றும் கழிவறைத்தொட்டி
21. கொல்லைப்புறம்

▪ தூண்கள்.

**கிராமத்து வீடு**

## கிராமத்தில் உள்ள வீடு (வேறுவகை)




1. தாழ்வாரம்
2. திண்ணை
3. ரேழி
4. கூடம் தாழ்வாரம்
5. அறைகள்
6. முன்கட்டு முற்றம்
7. சாப்பிடும் அறை
8. சமையல் அறை
9. அறைகள்
10. பின்கட்டு முற்றம்

10A. தானியங்களை மரக்குதிர்களில் வைத்துப் பராமரிக்கும் தாழ்வாரம்.

11. மாட்டுத்தொழுவம்
12. கிணறு
13. குளியல் அறை
14. கழிவறை

கழிவறை 10 எண் குறிப்பிடும் பின்கட்டு முற்றத்தின் வடகிழக்கு வடக்குப் பகுதியிலோ -தெற்குப் பகுதியிலோ அடைக்கலாம். அவ்வாறாயின் மேல்நிலை நீர் தொட்டி அமைத்து உரிய விதத்தில் தண்ணீர் வசதி செய்யப்படவேண்டும்.

வடகிழக்குப் பகுதியில் இத்தகைய அமைப்பு வீட்டின் பின்பகுதியை ஒட்டியதாக இருத்தல்கூடாது.

தனியாக அமைப்பதும்கூட வடகிழக்குப் பகுதியில் கழிவறை அமைப்பது சரியல்ல. அங்கு குளியல் அறையை மட்டும் அமைத்துக்கொண்டு கழிவறையின் வடமேற்கு தென்மேற்குப் பகுதியில் அமைக்கலாம்.

வீட்டின் உட்பகுதியிலும் இரட்டித்த எண்ணுள்ள தூண்களே அமைக்கப்படவேண்டும். இவ்வாறு அமைக்கப்படும் கிராமப்புற வீடுகள் அத்தலத்தின் சீதோஷ்ண நிலைக்கும், மழைக்காலம், குளிர்காலம், கோடைகாலம் ஆகிய பருவ காலங்களுக்கு ஏற்றவாறு சுகம் தருவதாக இருக்கும்.

கிராமப்புறத்து வீடுகளில் பிரதானவாசலைக் கடந்ததும், "ரேழி" எனப்படும் இடத்தைக் கடந்ததும், முதல் கட்டில் இருபுறமும் அமைந்துள்ள "ஹால்" போன்ற இடத்தில் தாழ்வாரத்தில் இடதுபுறத்திலோ, வலதுபுறத்திலோ திருமணம் போன்ற விழாக் காரியங்கள் செய்யப்படுவதற்காக விசேஷமான தளம் அமைப்பதுண்டு. சில வீடுகளில் வசதிக்காக இருபுறத் தாழ்வாரங்களுக்கு இடையில் சதுரமாக உள்ள இடத்தில் (முற்றம்) திருமணம் முதலான நிகழ்ச்சிகளை நடத்துவதற்கான இடமாக அமைப்பதும் உண்டு. அத்தாழ்வாரங்களை அடுத்து சிறு சிறு அறைகள் பலவித பொருள்களை வைப்பதற்கேற்றவாறு அமைக்கப்படும்.

முதற்கட்டிற்கு அப்பால் நிலைவாசல் அமைத்து அதற்கு அப்பால் இருபுறமும் அறைகள் அமைத்து, சமையல் அறை, உணவு உண்ணும் அறை, பூஜை அறை, உணவு தயார் செய்வதற்கு உரிய பொருள்கள், பாத்திரங்கள் மற்றும் மதிப்பு மிக்க பொருள்கள் ஆகியவற்றை வைக்கும் அறைகள் அமைப்பார்கள்.

இதனை அடுத்து பசுக்கள், கால்நடைகளைப் பராமரிப்பதற்கு உரிய விதத்தில் மாட்டுத் தொழுவத்திற்கு ஏற்றவிதத்தில் தளம் அமைக்கப்படும். இப்பகுதி வீட்டினை ஒட்டியதாகவும் இருக்கும். வீட்டின் கட்டிடப்பகுதி சம்பந்தம் இல்லாமல் வீட்டின் பின்புறம் தனியாகவும் தொழுவம் உரிய விதத்தில் அமைக்கப்படும்.

வீட்டின் முதல்கட்டுப்பகுதியில் வலதுபுறத்திலாவது, இடதுபுறத்திலாவது ஒரு பக்கச் சுவரை உயரமாகவும் மறுபக்கச் சுவரை சற்று சிறியதாகவும் அமைத்து, மழை

காலத்தில் மழைநீர் விழுவதற்கு ஏற்றவிதத்தில் சுட்ட ஓடுகள் கொண்டு கூரையை மறைத்து அமைத்தல் வேண்டும். இருபுறச் சுவர்களும் சம உயரமாகவே இருந்தால் அதற்கேற்ற விதத்தில் தக்க சாதனங்களை கொண்டு மேற்கூரையை அமைத்து சுட்ட ஓடுகளால் மேற்பகுதியை மறைத்தல் வேண்டும். மழை ஜலம் விழுந்து வெளியேறுவதற்கு ஏற்றவிதமாக மேற்கூரைப் பகுதியை அமைத்தல் வேண்டும். இருபுறச் சுவர்களும் உறுதியாக இருக்கும் விதத்தில் கிளிஞ்சில் சுண்ணாம்பு கொண்டு சுவரை அமைக்கப்பட வேண்டும். மேற்கூரை அமைக்கும் விஷயத்தில் கிராமங்களில் உள்ள மேற்கூரை மர வேலை செய்பவர்களைக் கொண்டு, அப்பணிகள் மேற்கொள்ளப்பட நன்மை உண்டு. முன் காலத்திலும்கூட வீடுகள் சிறிய கிராமங்களிலும் ஒருவித மாகவும், பெரிய கிராமங்களில் ஒருவிதமாகவும் அமைக்கப்படும்.

இக்காலத்தில் அமைக்கப்படும் வீடுகள் நகரங்களில் முற்றிலும் மாறுபட்டவையாக இருக்கின்றன. கிராமங்களில் வீடுகளைப் புதுப்பிக்கும்பொழுது காலத்திற்கு ஏற்றவாறு சிறுமாற்றங்களைச் செய்துகொள்கிறார்கள். ஆனால் நகரங்களிலாயினும், கிராமங்களிலாயினும் வாஸ்து சாஸ்திரங் களில் கூறப்பட்ட விதத்தில் விதிமுறைகளுக்கு ஏற்ப வீடுகளையும் வீட்டின் உட்பகுதிகளையும் அமைப்பது ஆரோக்கியமான அமைதியான வளமான வாழ்க்கை ஏற்பட உதவும். கிராமங்களில் உள்ள வீடுகள், கிராமத்தில் உள்ள தெருக்களின் நிலையை அனுசரித்து வீடுகளை அமைத்தார்கள். எல்லா கிராமங்களிலும், அதிலும் அந்தணர்கள் குடியிருப்புக்கள் உள்ள அக்ரஹாரங்களில் ஒரு வீட்டிற்கு ஒரு பக்கச்சுவர்தான் சொந்தமாக இருக்கும். தென்புறத்தில் உள்ள வரிசையில் முதலிலுள்ள வடக்குப் பார்த்த வீட்டின் தாய்ச்சுவர் (பிரதானச்சுவர்) வீட்டின் மேற்குப் புறத்தில் இருந்தால் கிழக்குப் புறச்சுவர் இரண்டாவது வீட்டின் தாய்ச்சுவராக இருக்கும். இப்படியே வரிசை முழுவதிலும் உள்ள வீட்டின் சுவர்கள் இருக்கும். அதே

வரிசையின் கடைசி வீட்டிற்கு இருபுறச் சுவர்களும் சொந்தமாக இருக்கும். முன்னாட்களில் அமைக்கப்பட்ட கிராமாந்தர வீடுகளின் உட்புற அமைப்பு அநேகமாக ஒரு வீடுபோலவே மற்ற வீடுகளில் இருக்கும். அளவு மாறுபடலாம். இடம் மாறுபடலாம். ஆனால் வீடுகள் கிழக்கு-மேற்குத் தெருவாக இருந்து தென்பக்கத்து வரிசையிலுள்ள வீடுகளில் சமையல் கட்டு போன்ற சில பகுதிகள் வாஸ்து சாஸ்திர விதிகளை அனுசரித்தே இருக்கும். ஆனால் வடக்குப் பக்க வரிசையில் உள்ள வீடுகளிலும். தெற்கு - வடக்குத் தெருவானால் இருவரிசைகளிலும் உள்ள வீடுகளில் சமையல்கட்டு அமைப்பு வாஸ்து சாஸ்திர விதிகளை அனுசரித்தவைகளாக இருப்பது இல்லை. அதன்பயனாக நூறு ஆண்டுகள் வயதான வீடுகள் உள்ள அக்ரஹாரங்களில் கிழக்கு - மேற்குத் தெருவானால் தென்புற வரிசையிலுள்ள வீடுகளில் பல பெருமை குன்றாமல் இருக்கின்றன. ப்ரம்மஸ்தானம் எனப்படும் வாஸ்துவின் மத்தியப்பகுதியில் துளஸி மாடம் அமைத்து வழிபடுகிற படியால் அத்தகைய வீடுகள் ஓரளவு சுபிட்சம் குறையாமல் இருக்கும் / இருக்கவும் செய்கின்றன. கிராமங்களில் உள்ள வீடுகளில் தினந்தோறும் பராமரிப்பு செய்து வாசலில் நீர் தெளித்து, கோலமிட்டு, நூலாம்படைகளை அகற்றி, குப்பை, தூசிகள் அடைந்துவிடாமல் பரிபாலத்துவந்தால் அத்தகைய வீடுகள் ஒளி (சௌபாக்யத் தோற்றம்) குன்றாமல் இருக்கும். அப்படிக்கில்லாவிட்டால் அந்த வாஸ்து பாழடைந்து விடுகின்றன. வாஸ்து விதிகளையும் வீடுகளையும் ப்ரம்மஸ்தானம் போன்ற இடங்களையும் சரியாகப் பராமரிக்காமல் உள்ள வீடுகளும் விதிமுறைகளைப் பின்பற்றாமல் சமையல் அறை போன்ற இடங்கள் கிணறுகள் வடகிழக்குப் பகுதிகளில் அசுத்தம் நிறைந்தவைகளாகவும் கழிப்பிடங்களாகவும் பயன்படுத்தப் படுவதாலும் சரியான விதத்தில் வாஸ்துக்கள் வீடுகள். குப்பைகள் அகற்றி நீர்தெளித்து பராமரிக்கப்படாமல் போவதாலும் பிரதிகூல பலன்கள் ஏற்படுகின்றன. வீடுகள் பாழடைந்து கைமாறி விடுகின்றன.

படத்தில் காட்டப்பட்ட வீடு சுமார் 100 அடி நீளம் (30 அடி உள்ள கொல்லைப்புறம் உள்பட) உள்ளது. மிகவும் பெரிய உயர்ரக மரங்கள் கொண்டு சுமார் 65 வருஷங்களுக்கு முன்னால் கட்டப்பட்டது. வீட்டின் முன்வாசல் வடக்கு திசை நோக்கியிருக்கும் வாசல் வராண்டா திண்ணையைக் கடந்து சென்றால் "தேஹலீ" என்று வழங்கப்படும் ரேழிப் பகுதி. அதனை அனுசரித்து வலதுபுறத்தில் இதை அடுத்து மிகப் பெரியமுற்றம். அதன் வலதுபுறத்தில் தாழ்வாரம், கூடம் என்ற பகுதி உண்டு. அதில் தாழ்வாரத்தில் 7 தூண்களும், கூடத்தில் 4 தேக்கு மரத்தூண்களும் உண்டு. மேற்புறம் தேக்கு மரச்சட்டம் அமைத்து நாட்டு ஓடு வேயப்பட்டது. அப்பகுதி பார்க்கிறவர்களுக்குத் தெரியாமல் இருக்கவும், தூசிகள், நூலாம்படை அதிகம் ஏற்படாமல் இருக்கவும் தேக்கு பலகைகள் கொண்டு தைக்கப்பட்டது. அடுத்து சமையல் அறை, தானியம் சேமிக்கும் அறை, சமையல் அறையிலும் நான்கு தேக்கு மரத்தூண்கள் பெரிய முற்றம் கடந்தால் இரண்டாம் கட்டு சிறிய முற்றம் உண்டு. அடுத்து 3வது கட்டு முற்றம். அதையும் கடந்தால் இரவு வேளையில் கால்நடைகள் கட்டிவைப்பதற்கான பெரிய கொட்டில் அதிலும் கருங்கல் தூண்கள், அதையும் கடந்தால் சிறிய கொட்டில், கொல்லைப்புறம், குழாய் கிணறு. வாசலிலிருந்து பார்த்தால் குழாய் கிணறு தெரியும். தென்மேற்குப் பகுதியில் கழிப்பிடம்.

இத்தகைய வீடு இந்த நாட்களில் அமைக்கப்பட்டால் பல லக்ஷ ரூபாய்கள் பிடிக்கும். பர்மா தேக்கு மரத்தாலான நிலைவாசல், கதவுகள், தூண்கள், உத்தரங்கள். மேல்புற தேக்கு பலகைகள், சட்டங்கள், ஜன்னல்கள் (வாசல்புறம் உள்ள இரு அறைகளுக்கு மட்டும் உள்ளவை) அலமாரிகள், கருங்கல் தூண்கள், செங்கற்கள், நாட்டு ஓடுகள் ஆகியவற்றை இன்றைக்கு மதிப்பிட்டால் பல லக்ஷம் ரூபாய் மதிப்புள்ளது.

அதை அமைத்த மூலபுருஷனுக்குச் சந்ததி இல்லை. இவ்வளவு பெரிய வீட்டில் தம்பதியர் இருவர் மட்டும் வாழ்ந்து மறைந்தினர். வீடு கைமாறியது. அப்பொழுதும் அதில் யாரும் குடியுருக்கவில்லை. பல பல வருஷங்கள் அது

தானியக் கிடங்காகவும். கால்நடைகள் அடைத்து வைக்கவும் மட்டும் பயன்பட்டது. ஒருசில ஆண்டுகள் நானும் ரூ. ஐந்து மட்டும் வாடகைக் கொடுத்திருந்தேன். அதன்பலன் நானும் அங்கிருந்து அந்த ஊரைவிட்டே வெளியேறி தஞ்சைக்கு வர நேரிட்டது. இன்று அந்த வீடு முற்றிலும் இடிக்கப்பட்டு அதிலுள்ள மரங்கள் தூண்கள், நிலைகள், கதவுகள் யாவும் யாரோ நகரத்தில் வீடு அமைக்கும் காண்டிராக்டர் ஒருவரால் சில ஆயிரம் ரூபாய்கள் கொடுத்துவாங்கப்பட்டு அப்புறப் படுத்தப்பட்டன.

ஒரு பழைய வீட்டில் அமைக்கப்பட்டுள்ள மரங்கள் ஜன்னல்கள், கதவுகள், நிலைகள். செங்கல் போன்றவற்றைக் கொண்டு திருத்தம் செய்து புதிதாக வீடு அமைப்பது விருத்திக்குவராது என்பது வாஸ்து சாஸ்திர விதிகளில் ஒன்று. அதுபற்றி வீடு அமைத்துக்கொடுக்கும் தொழிலில் உள்ள காண்டிராக்டர் அறியாதவர் இல்லை. சில ஆயிரம் ரூபாய்கள் செலவில் இத்தகைய வீடுகளை வாங்கி இடித்து, நகரங்களில் புது வீடுகள் அமைத்துப் பல லக்ஷங்களைச் சம்பாதிக்கும் ஆசைதான் காரணம். அவர் அமைக்கும் "புதிய" வீட்டினை (ஒரு பழைய வீட்டில் பயன்படுத்தப்பட்டு, அதனை இடித்து விட்டு, அதிலிருந்து மரங்களைக் கொண்டு கட்டப்பட்ட) வாங்குகின்றவருடைய நலன்பற்றிக் கவலைப்படாமல் அத்தகைய வீடு அமைக்கும் அவருடைய வருமானம் என்னாவது! பல நூற்றாண்டுகள் ஜீவ தசையுடன் இருக்கவேண்டிய அந்த வாஸ்து ஒரு நூறு ஆண்டுகூட நன்மை பயப்பதாக கட்டியவருக்கும், பின்னல் வந்தவர் களுக்கும், குடியிருந்தவருக்கும்கூட பயன்படாமல் போனதேன்.

வாஸ்துவின் உடலில் முகம், மார்பு, தொப்புள் பகுதி, மார்பு மற்றும் பல மர்மஸ்தானங்களில் தூண்களைக் கண்ட இடங்களில் மனம்போனபடி அமைத்தும், ப்ரம்மஸ்தானத்தைச் சரியாகப் பராமரிக்காமலும், மனம்போனபோக்கில் தூண்களை அமைத்தும் வாஸ்து சாந்தி போன்ற வழிபாடுகள் செய்யப் படாமலும் போனதால் மதிப்புமிகுந்த அந்த வீடு இன்று

இருந்த இடம் தெரியால் போயுள்ளது. ஆகையால் வாஸ்து சாஸ்திர விதிமுறைகளை அனுசரித்து வீடுகள் அமைக்கப்பட வேண்டியது அவசியம். வாஸ்து சாந்தியையும் முறைப்படிச் செய்யவேண்டும் என்பது அனுபவத்தால் உணரப்படுகிறது. வாஸ்து சாந்தி க்ஷேத்ரபாலருக்கான ஜபம், ஹோமம் முதலானதும் நவக்ரஹங்களுக்கான ஜபஹோமமும் அவ்வப்போது செய்துவந்தால் வாஸ்து, கட்டப்பட்ட வீடு கவர்ச்சி மிக்கதாகவும் ஸௌபாக்கியம் அளிப்பதாகவும் ஆகிறது.

இன்றைய விஞ்ஞான முறையிலும்சரி, தூண்கள் அமைக்காமல் வீடுகள் அமைக்கப்படுவதும் வாஸ்து புருஷனின் மர்ம ஸ்தானங்களைத் துன்புறுத்தாமல் வாஸ்து அமைக்கப்படவேண்டும் என்று கூறும் ஸமராங்கண ஸூத்ரதார நூலின் கருத்தை அனுசரித்துதாகவே இருக்கிறது.

अन्तः त्रयोदशसुराः द्वात्रिंशत् बाह्यतश्च ये ।
तेषां स्थानानि मर्माणि सिरावंशाश्च तेषु तु ।।

मुखे हृदि च नाभौ च मूर्ध्नि च स्तनयोस्तथा ।
मर्माणि वास्तुपुंसोऽस्य षड्(ण)महान्ति प्रचक्षते ।।

அந்த: த்ரயோதசஸுரா: த்வாத்ரிம்சத் பாஹ்யதச்ச யே ।
தேஷாம் ஸ்தாநாநி மர்மாணி ஸிராவம்சாஸ்ச்ச தேஷு து ॥

முகே ஹ்ருதி ச நாபௌ ச மூர்த்நி ச ஸ்தநயோஸ்ததா ।
மர்மாணி வாஸ்து பும்ஸோ஽ஸ்ய ஷட்(ண்)மஹாந்தி ப்ரசக்ஷதே

வாஸ்து மண்டலத்தில் ப்ரம்மஸ்தானத்தைச் சுற்றிலும் 13 தேவர்களும், வெளியில் 32 தேவர்களும் உள்ளனர். அவர்கள் இருக்கும் இடங்கள் வாஸ்து புருஷன் முக்கிய உறுப்புக்கள் ஆகும். அவற்றுள் முகம், தலை, தொப்பூழ் பகுதி, இதயம், இருபுற மார்பகங்கள் ஆகிய ஆறு இடங்களும் வாஸ்து புருஷனின் மர்ம ஸ்தானங்களாகக் கூறப்பட்டுள்ளன. அந்தப் பகுதியில் தூண்கள் வைப்பதும், சுவர் எழுப்புவதும் கனம்

மிகுந்த பொருள்களை வைப்பதும் வாஸ்து புருஷனுக்கு இடையூறு (தொந்திரவு) தருவதாக இருக்கும். அப்படிச் செய்தால்-சுவர்கள், தூண்களை மர்மஸாதனங்களில்- அமைத்தாலும் பிரம்ம ஸ்தானத்தில் கொடிய செய்யத்தகாததைச் செய்தாலும் வீட்டின் தலைவனுக்குத் துர்கதியும், குலநாசமும் ஏற்படும் என்று சொல்வார்கள்.

भित्तिविस्तृतमध्येन यद्वा मध्येन दारुणः ।
मर्म यत्पीड्यते येन गृहे तत्रोच्यते फलम् ।।

दौर्गत्यं गृहिणः प्राहुः कुलहानिमथापि वा ।
कर्णसूत्रात् बहिः स्तम्भान् न्यसेत् सर्वान् प्रयत्नतः ।।

பித்திவிஸ்த்ருதமத்யேந யத்வா மத்யேந தாருண: ।
மர்ம யத்பீட்யதே யேந க்ருஹே தத்ரோச்யதே பலம் ॥

தௌர்கத்யம் க்ருஹிண: ப்ராஹு: குலஹாநிமதாபி வா ।
கர்ணஸூத்ராத் பஹி: ஸ்தம்பாந் ந்யஸேத் ஸர்வாந் ப்ரயத்நத: ॥

(ஸமராங்கண ஸூத்ரதார - 19 அத். 21வது ச்லோகம்)

என்ற ச்லோகமும் கர்ணஸூத்ரத்திற்கு வெளியில்தான் தூண்களை ஸ்தாபிக்கவேண்டும் என்று கூறுகிறது.

## ஒரு மனையில் இரண்டு மூன்று வீடுகள் அமைப்பதுபற்றி (2 Block system, 3 Block system)

ஒரு மனையில் ஒரு வீடும், ஒன்றுக்கு மேற்பட்ட வீடுகளும், மனை சற்று பெரியதாக இருந்தால் அதே மனையில் பல வீடுகளும் அமைப்பதுபற்றி ஸமராங்கண ஸூத்ரதார என்ற நூலில் 20வது அத்தியாயம் கூறுகிறது.

தனி வீடாக இருப்பின், அதன் முன்புறம், பின்புறம், இடதுபுறம், வலதுபுறம் என்பதை அவ்வீட்டின் வாசலை மையமாகவைத்துக் கணக்கிடவேண்டும். வீட்டின் உள்தளம்

அமைக்கும்பொழுது தென்புறமாகத் தண்ணீர் வடியுமானால் அது சுபமல்ல. பல தோஷங்கள் உள்ளது. மேற்குப் பக்கம் தாழ்ந்து முன்புறம் சற்று உயர்ந்திருப்பின் அத்தகைய வீடு செல்வவளம் மிக்கதாக வீட்டின் சொந்தக்காரார் நினைத்த காரியங்கள் நிறைவேறக் கூடியதாக உயர்வானதாகவும். கருதப்படும். தளங்கள் அமைப்பது பற்றியும், அதில் விபரங்கள் தரப்பட்டுள்ளன. பலவிதத்திலும் நன்றாக சோதனைசெய்து ஆய்வுசெய்து அமைக்கப்பட்ட தனி வீடு சிறப்பாகவே விளங்குகின்றது.

समापितं तु यद्वास्तु सर्वतः परिशोधितम् ।
स्वामिनः तद्भवेत् धन्यं स्थपतेश्च यशस्करम् ।।

ஸமாபிதம் து யத்வாஸ்து ஸர்வத: பரிசோதிதம் ।
ஸ்வாமின: தத்பவேத் தன்யம் ஸ்தபதேச்ச யசஸ்கரம் ॥

## ஒரு மனையில் இரு வீடுகள் (2 Block in one site)

இதில் பலவகைகள் கூறப்படுகின்றன. ஸித்தார்த்த, யமசூர்யம், தண்டம், வாதம், காசம் சுல்லீ என்று பல பெயர்கள் கூறப்பட்டுள்ளன.

இது வடக்குத் திசையைப் பார்க்கும் வாசலை உடைய வீடு ப்ரம்மஸ்தானத்திற்குத் தென்புறத்தில் அமைக்கப்பட்ட வீடு உத்தமம் இதுவே தென்புறம் நோக்கியதாக இருப்பின் தரமில்லை. இதேபோல் கிழக்கு நோக்கிய வீடாக இருப்பின் உத்தமம். மேற்கு நோக்கியிருப்பின் சிறப்பல்ல.

இதுபோலவே இருமனைகள் அமைவது

ப்ரம்மஸ்தானத்திற்குத் தென்புறத்தில் அமைக்கப்பட்ட ஒரு குடியிருப்பு (வடக்குப்பார்த்த) வீடும், மேற்குப் புறத்தில் ஒரு வீடும், கிழக்குப் பார்த்த வீடும் உத்தமம். இவ்வகையிலான வீடு சிறப்பானதாகும். இதற்கு ஸித்தார்த்த

என்று பெயரிடப்பட்டுள்ளது. "सिद्धार्थ दक्षिणाप्रत्यक्" ப்ரம்ம ஸ்தானத்திற்குத் தெற்குப் பக்கம் ஒரு வீடும், மேற்குப் பக்கம் (கிழக்குப் பார்த்த வீடு) ஒரு வீடும் அமையுமானால், வடக்கு நோக்கியதாகவும், கிழக்கு நோக்கியதாகவும் உள்ள வீடு "ஸித்தார்த்த" என்று வழங்கப்படுகின்றது.

இவ்விதம் **யமஸூர்யம்** என்று வழங்கப்படும் இருசாலா மேற்குப் பார்த்தாயும், தெற்கு நோக்கியதாயும் உள்ள வீடு சுபமல்ல. இவ்விதம் அமைக்கப்பட்ட வீட்டில் மரணபயம் ஏற்படும். "यमसूर्यमुदक् प्रत्यक् तत्र मृत्युभयं सदा".

இவ்விதம் கிழக்கில் மேற்கு நோக்கிய வீடும், தெற்கு நோக்கிய வீடும் தண்டம் என்று வழங்கப்படுகிறது. இத்தகைய வீட்டில் வசிப்பவர், வீட்டின் தலைவருக்கு ஏதாவது அபராதம் செலுத்தும்படி தண்டனைபெறும் நிலை ஏற்பட்டுவிடும். ஆதலின் இதுவும் உகந்ததல்ல.

இவ்வாறு "**காச**" என்ற பெயருள்ள "த்விசாலா" (2 Block) வடக்குப் பார்க்க ஒரு வீடு, தெற்குப் பார்க்க ஒரு வீடு என்று இருப்பின் அது காச வாஸ்து. சுமாரானதாகும். இதிலுள்ள யஜமானனுக்கு பங்காளி சண்டை ஏற்படும். उदक् दक्षिण साम्मुख्ये द्विशालं काचवास्तिति: तत्र ज्ञातिविरोधः स्यात् ।

இதனை அடுத்து 72 வகையிலான 3 Block வீடுகள்பற்றி "ஸமர ஸூ." நூலில் 19வது அத்தியாயத்தில் கூறப்படுகிறது. அவற்றில் முக்யமானவை நான்கு

मुख्यानि तेषु चत्वारि . . . . . . . . . . . .
हिरण्यनाभं सुक्षेत्रं चुल्ली पक्षघ्नमेव च ।।

முக்யாநி தேஷு சத்வாரி . . . . . . . . . . .
ஹிரண்யநாபம் ஸுக்ஷேத்ரம் சுல்லீ பக்ஷக்நமேவ ச ॥

**ஹிரண்யநாபம்** ஸுக்ஷேத்ரம், சுல்லீ, பக்ஷக்னம் என்பன. ஹிரண்யநாபம் என்பது கிழக்கு/தெற்கு/மேற்குத் திசைகளில் மேற்குபார்த்த, வடக்குப் பார்த்த, கிழக்குப் பார்த்த



ஹிரண்யநாபம்



ஸுக்ஷேத்ரம்



சுல்லி

வீடுகள் உள்ள அமைப்பு. இது உயர்வானது. இத்தகைய Block மனையின் தலைவனுக்குச் செல்வ வளர்ச்சி ஏற்படும். "तत्स्यात् धनप्रदं भर्तुः" (தத்ஸ்யாத் தனப்ரதம் பர்த்து:) அத்தகைய வீடு சொந்தக்காரருக்கு மிகுந்த செல்வத்தை அளிப்பதாகும்.

ஸுக்ஷேத்ரம் என்பது வடக்கு, தெற்கு, மேற்கு திசைகளில் உள்ள தெற்கு நோக்கிய வடக்கு நோக்கிய கிழக்கு நோக்கிய Block ஆகும். இதுவும் சிறந்ததே. செல்வ விருத்தி அளிப்பதாகும். सुक्षेत्रम् पूर्वया विना - ஸுக்ஷேத்ரம் பூர்வயா விநா.

சுல்லி : மேற்கு, வடக்கு, கிழக்கு திசைகளில், கிழக்கு, தெற்கு, மேற்கு, நோக்கிய Block. இது செல்வ நஷ்டம் தருவதாகும்.

**பக்ஷக்னம்** : இது பலவகைப்படும். இவ்விதம் 8 Block வரையில் தொகுப்பு வீடுகளைப்பற்றி ஸமராங்கண ஸூத்ரதார நூலில் கூறப்படுகிறது.

**பூஜை அறை**

சூரியன் உதிக்கும் காலத்தில் சூரியனுடைய கதிர்கள் வீட்டில் எந்தப் பக்கத்தில் பகுதியில் விழுகிறதோ அந்த இடத்தை பூஜை அறையாக உபயோகிக்கவேண்டும். பெரும்பாலும் அமைக்கப்படும் வீட்டின் வடகிழக்கு மூலையில் உதயகாலத்தில் சூரிய ஒளி பரவும் என்பதால் வீட்டின் வடகிழக்கு மூலை பூஜைக்கு உரியதாகும். அந்த வடகிழக்குப் பகுதியை மட்டும் அதிகம் உயர்த்தினால் அந்த வீட்டில் வசிக்கும் நபர் சுறுசுறுப்பில்லாதவராகவும், மந்தநிலையில் (Dullஆக) இருப்பவராகவும் ஆவார்.

## மாதிரி வீடு






1. கூடம்
2. தங்குமிடம்
3. அலுவலக அறை
4. குளியல் அறை
5. சமையல் அறை
6. பூஜை அறை
7. சாமான்கள் அறை
8. படுக்கை அறை
9. படுக்கை அறை
10. கழிவறை
11. கிணறு - ஆழ்குழாய்
12. கழிவறைத் தொட்டி

இயற்கையில் சுறுசுறுப்பு உள்ளவராக இருந்தாலும் கூறப்பட்டுள்ளவாறு அமைக்கப் பட்ட வீட்டில் வசித்தால் மந்தத்தன்மை அவருக்கு ஏற்படும். அத்தகைய வீட்டில் வசிக்கும் சிறுவர்கள் கல்வியில் தேர்ச்சி பெறாதவர்களாக ஆர்வமற்றவர்களாக இருக்கலாம். ஆதலால் அமைக்கப்படும் வீட்டின் வடகிழக்கு திசைப் பகுதியில் பூஜை அறை அமைப்பதுதான் சிறந்தது. அப்பகுதியில் துளஸிமாடம் அமைப்பது உகந்ததாக இருக்கும். கிராமப்புற வீடுகளில் தனியாக பூஜை அறை பெரும்பாலும் இருப்பதில்லை. தாழ்வாரத்தின் ஒரு பகுதியையே பூஜைக்கான அறையாகப் பயன்படுத்தப்படும்.

### குளியல் அறை

பொதுவாக வீட்டில் புழங்கும் தண்ணீராயினும், வீட்டில் விழும் மழை நீராயினும் வடக்கில், வடகிழக்கில் அல்லது கிழக்கில் வடியும் விதத்தில் தரைமட்டம் அமைக்கப்பட வேண்டும். ஆதலால் வீட்டின் கிழக்குப் பகுதியில் குளியலறை அமைத்தல் நன்று. வடமேற்கு-மேற்கு திசையில் குளியலறை அமைப்பதானாலும் அத்தண்ணீர் வடக்கு, வடகிழக்கில் வடியும் விதம் தரை, நீர்த்தாரைமட்டம் அமைக்கப்படவேண்டும். குளித்ததும், வீட்டில் உள்ளவர்கள் வழிபாடு செய்ய முற்படும்பொழுது ஆரோக்கியம்தரும் தெய்வமான சூரியனை வழிபடுவதற்கு இயலும், எளிதாகவும் இருக்கும். கிழக்குப் பகுதியில் குளியலறை அமைக்க வாய்ப்பு வசதி இல்லையாயினும் வீட்டிற்குக் கிழக்கிலுள்ள திறந்தவெளியில் ஒரு தளம் அமைத்து அதனைச் சுற்றிலும் தடுப்பு (மறைப்பு) அமைக்கலாம்.

### பிரசவ (பிரசவித்தவர் தங்கும்) அறை

முன்நாட்களில், இக்காலத்தில் உள்ளதுபோன்ற மருத்துவ வசதி இல்லாதிருந்தபொழுது பிரசவத்திற்கும், பிரசவித்த பிறகு தாயையும் - சேயையும் தங்கவைப்பதற்காக வீட்டில் ஒரு பகுதியில் அறை அமைப்பது உண்டு. இக்காலத்தில் பெரும்பாலும் மருத்துவ விடுதிகளில்தான் பிரசவம் அமைகிறது என்பதனால் இக்காலத்திய வீடுகளில் பிரசவ

அறை (Labour Room) என்று ஏதும் அமைக்கிறதில்லை. ஆனாலும், மருத்துவ விடுதிகளில் பிரசவம் ஏற்பட்டு வீட்டிற்கு அழைத்துவந்த பிறகு தாயும் - சேயும் தங்குவதற்கு வசதியாக ஒரு அறையை அல்லது வீட்டின் ஒரு பகுதியில் அதற்கான ஒதுக்கவேண்டியதாகத்தான் இருக்கும். ஆதலின் இத்தகைய வசதிகளைச் செய்துகொடுக்க வீட்டின் கிழக்குப் பகுதியைத் தேர்வு செய்யலாம். கிழக்குப் பகுதியில் சூரிய ஒளிபரவும் விதமாகப் பிரசவ அறை அல்லது பிரசவத்திற்குப் பின் தங்குவதற்கான அறையாகப் பயன்படுத்தும் விதத்தில் வீட்டின் கிழக்குப் பகுதியில் அதற்கான வழிவகைகளைச் செய்யவேண்டும்.

**சமையல் அறை**

உணவுப் பண்டங்களைத் தயார் செய்வதற்கு அக்னி மிகவும் அவசியமாகும். பண்டைக்காலத்தில் அடுப்புக்களில் விறகுகளைப் பயன்படுத்தினர். இக்காலத்தில் விஞ்ஞான ரீதியில் கிடைக்கும் வாயு எரிபொருளாகப் பயன்படுத்தப் படுகிறது. எந்த வகையிலானாலும் அக்னி இருந்தாலன்றி உணவுப் பண்டங்கள் தயார்செய்ய இயலாது. அக்னிக்கு உரிய திசை தென்கிழக்காகும். ஆகையால் பண்டைக் காலத்தில் வாஸ்து நூல்களை இயற்றியவர்கள் அக்னி திசையில் சமையல் அறையை அமைத்தல் வேண்டும் என்று கருதினர், தம் நூல்களிலும் எழுதினர்.

இறைவழிபாட்டில் மந்திரங்களைச் சொல்லிய வண்ணம் அக்னியில் பொருள்களை வழங்குவது என்பது ஒரு பிரிவாகும். இத்தகைய வழிபாட்டில் ஒருவர் எத்தனை சிரத்தையை, அக்கரையை, பொறுப்புணர்வை மேற்கொள்கிறார் களோ அதைவிடவும் அதிகம் சிரத்தையுடனும் பொறுப்புடனும் உணவுப்பண்டங்களைத் தயார் செய்கிறார்கள். புதிதாகத் தனி வீடுகளை நிர்மாணம் செய்யும் கலைஞர்கள் வாஸ்து நூல்களில் கண்டுள்ளவாறு வீட்டின் உட்பகுதிகளை அமைக்கலாம். ஆனால் பல வீடுகள் தொகுப்பாக அமைக்கப்படும் நிலையிலும், இந்த விதிமுறைகளை அறியாமல் அமைக்கப்பட்ட வீடுகளிலும் தென்கிழக்குப்

பகுதியில் சமையல் அறையை அமைக்க இயலாமல் போகலாம் அமைக்கப்படாமல் இருந்திருக்கலாம். அந்த மாதிரியான வீடுகளில் வாஸ்து விதிமுறைப்படி சமையல் கூடத்தை மாற்றி அமைக்க இயலாமல் போகலாம். (வசதி உள்ளவர்கள் தனி வீடுகளில் இத்தகைய மாற்றங்களைச் செய்துகொள்ளலாம்) அம்மாதிரியான குடியிருப்பு வீடுகளில் தென்கிழக்குப் பகுதியில் ஒரு சிறு அடுப்பைத் தயார்செய்து அல்லது இக்காலத்திற்கு ஏற்றவாறு ஒரு ஸ்டவ் அடுப்பை அமைத்து, அதனைப் பயன்படுத்தி சுடுநீர், சிற்றுண்டி, காபி, தேநீர் தயார்செய்து அருந்தலாம். இது ஒரு தற்காலிக மாற்றமாக - பயனுள்ள மாற்று - உபாயமாகக் கொள்ளலாம். வீட்டின் தென்கிழக்கு மூலையில் சமையல் அறையை அமைக்காமல் வேறு தெற்கு-வடக்கு-வடமேற்குப் பகுதிகளில் சமையல் அறைகளை அமைத்து அவற்றில் தயார் செய்யப்படும் உணவுப் பண்டங்களை உண்பவர்களின் ஆரோக்கியம் அடிக்கடி பாதிப்புக்குள்ளாகிறது என்பது அனுபவத்தில் கண்டறியப்படும் உண்மையாகும். ஆதலின் சமையல் அறைப்பகுதியை வாஸ்து விதிமுறைப்படி மாற்றி அமைக்க இயலாத இடங்களில் முன்கூறப்பட்டவாறு தற்காலிக ஏற்பாடுகளைச் செய்துகொள்ளலாம்.

**படிக்கும் அறை**

பின்வரும் படத்தில் காட்டப்பட்டவாறு வீட்டின் உள்பகுதிகள் அமைப்பது நல்லது.

| | | |
|---|---|---|
| 1 | 2 | 3 |
| 4 | 5 | 6 |
| 7 | 8 | 9 |

1. வழிபாட்டு அறை
2. குளியல் அறை
3. சமயல் அறை
4. மதிப்புள்ள பொருட்கள் வைப்பதற்கானது
5. ப்ரம்மஸ்தானம்
6. படுக்கை அறை
7. கால்நடைக்கானது
8. உணவு உண்ணும் அறை
9. படிப்பதற்கான அறை

வாஸ்து சாஸ்திர நூல்களில் ஒரு வீட்டின் தென்மேற்குப் பகுதி படிப்பதற்கு உரியதாகக் கூறப்படுகிறது. பொதுவாக ஜோதிட முறைப்படி புதன் கிரஹம் வித்யாகாரகன் (Lord of studies) என்று சொல்லப்படுகிறது. படிப்பவர் வடக்கு அல்லது வடகிழக்கு மூலையைப் பார்த்தவாறு அல்லது கிழக்கு திசையை நோக்கியவாறு அமர்ந்து படித்தால் கல்வியில் சிறந்து விளங்கலாம். வடகிழக்குப் பகுதி புதனுக்குரியது. வடதிசை ஞானகாரகனாகிய (Lord of intelligence) குருவிற்குரியது. கிழக்கு திசை கலைஞானத்திற்குக் காரகனாகிய (Lord of fine arts) சுக்ரனுக்குரியது. ஆதலின் வடமேற்குத் திசையில் அமர்ந்து வடக்கு அல்லது வடகிழக்கு அல்லது கிழக்கு நோக்கியவாறு படித்தால் நல்லது.

**படுக்கை அறை**

நாள் முழுவதும் வேலையில் ஈடுபடும் மனிதனைப் புத்துணர்ச்சியும்-சுறுசுறுப்பும்- தெளிவான சிந்தனைகளையும் பெறச்செய்வது தூக்கமேயாகும். அறையில் படுக்கும்பொழுது தலையை கிழக்கு திசையிலோ, தெற்கு திசையிலோ அல்லது மேற்கு திசையிலோ வைத்துப்படுக்கலாம். தெற்கில் தலைவைத்துப் படுத்தால், படுக்கிறவருடைய பார்வை வடதிசை அதிபதியான குபேரனை நோக்கியவாறு இருக்கும். செல்வத்திற்கு அதிபதியான குபேரனுடைய பார்வை படுக்கிறவர்மீது விழுவது இல்வாழ்க்கைக்கு இன்றியமையாத செல்வத்தை விருத்திசெய்யும்.

வடக்கில் தலைவைத்துப் படுத்தால் அவருடைய பார்வை தென்திசை அதிபதியாகிய யமன்மீது விழும். இதனால் மட்டுமின்றி வட துருவத்தின் தாக்குதலுக்கும் ஆளாக நேரிடும். இதனால் அமைதியற்ற தூக்கம், கெட்ட கனவுகள், தலைசுற்றல் போன்ற தீமைகள் ஏற்படலாகும்.

